சிவமயம்

# குமரகுருபரன்



மலர் 19 ] 1968-௵ ஆவணி ௴ 1-ம் ௳ (16-8-68) [ இதழ் 8

தனிப்பிரதி 25 பைசா வருடச் சந்தா ரூ. 3-00

# ஆசிரியர் குழு



# உள்ளுறை



''பூவிருந்தவல்லி வைத்தீஸ்வரர்''
கோயிலின் ஒரு தோற்றம்



உமா சந்திரசேகரர்
''பூவிருந்தவல்லி வைத்தீஸ்வரர் ஆலயம்''

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 19 | கீலக ஹூ ஆவணித் திங்கள் 1-ம் உ (16-8-68) | இதழ்-8

# பூவிருந்தவல்லி வைத்தீஸ்வரர்

திரு. ப. நா. பாலசுப்பிரமணியன் அவர்கள், B. SC.,
35, கவரைத்தெரு,
சைதாப்பேட்டை, சென்னை-15.

---

**வை**த்தீஸ்வரன், கோயில் என்றதும் 'நெற்களஞ்சியம்' என்று சொல்லக்கூடிய தஞ்சை மாவட்டத்தில் தேஜோ மய மாய் வீற்றிருந்து பிணியாளர்களது நோய்நீக்கி, எல்லோரும் உடல்நலத்தோடு, உள்ளஉவகையோடு வாழ அருள்பாலித்து வரும் அற்புதக் கடவுளான வைத்தீஸ்வரனின் நினைவுதான் நமக்கு வரும். சென்னை நகருக்கருகிலும் ஒரு வைத்தீஸ்வரர் எழுந்தருளி, சென்னை வாசிகளின் பிணி நீக்கி அவர்கள் அக மகிழ்ச்சியோடு வாழ்க்கை நடத்த அருள்பாலிக்கும் அற்புத உண்மை பலருக்குத் தெரியாது என்று கூடச் சொல்லலாம்!

**பூந்தமல்லி வைத்தீஸ்வரர்:**

மல்லிப்பூவிற்குப் பெயர்போன 'பூந்தமல்லி', சென்னை நகருக்கு அருகாமையில் உள்ள ஓர் அழகான சிற்றூர். இந்த ஊர் செங்கல்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்தது. இந்த ஊரில் வேறுபல விசேஷங்கள் இருப்பினும் தேஜோ மயமாக வைத்தீஸ்வரர் வீற்றிருந்து ஊரின் பெருமைக்கு மேலும் சிறப்புத் தேடித்தருகிறார். இந்த பூந்தமல்லி வைத்தீஸ்வரன் கோயிலின் சிறப்பான அம்சங்களைக் காண்போம்.

**கண்கொள்ளாக்காட்சி:**

மாசி மாதம் 21ம் தேதிக்கும் 25ம் தேதிக்கும் இடையில் இக்கோயிலில் ஓர் அற்புதம் நிகழ்கின்றது. 'சூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்துஷஸ்ச' என்று வேதம் போற்றும் சூரியன், இக் கோயிலின் மூலவர் மீது வட்டமான வடிவில் ஒளிப்பிழம் பாகத் தனது கிரணங்கள் வாயிலாக விழுவதன் மூலம் தனது வணக்கத்தையும் வாழ்த்தையும் தெரிவித்துக் கொள்கிறான். எப்பொழுதும் கர்ப்பக்கிருகத்தில் சுடர்விட்டெரியும் விளக்குகள், இந்த ஒளியரசனின் - விஜயத்தின்போது தலைதாழத் தான் செய்கின்றன! நமது ஒளிதரும் சக்தி மங்கி விட்டதோ என அவ்விளக்குகள் ஐயுற்று நாணும் வகையில் அமைந்துள்ளது இக்காட்சி!

கோயிலின் கோபுரத்தில் உள்ள சாளரம் வழியாக வரும் சூரிய ஒளி வட்டமான வடிவில் கர்ப்பக்கிருகத்துக்குள் சென்று மேலிருந்து கீழிறங்கி குறிப்பிட்ட நேரத்தில் மூலவரது (சிவலிங்கம்) மீதுவிழுகிறது. சூரியனது வரவால் மகிழ்ச்சியுறும் ஈஸ்வரர் பூரித்துப் புளகாங்கிதம் பெற்று ஒளி மயமாகக் காட்சிதருகிறார். சூரியனின் வரவில் ஈஸ்வரருக்கு அளவற்ற மகிழ்ச்சி போலும்! ஈஸ்வரரின் ஒளிமயமான காட்சியை வார்த்தைகளால் வர்ணித்துவிடமுடியாது! அவனளித்த கண்களால் நேரில்கண்டு இன்புறவேண்டிய இணையற்ற காட்சி இது! மாசிமாதத்தில் இந்நிகழ்ச்சி நடைபெறும் சமயத்தில் கோயிலில் பக்தர்கள் பெருமளவில் கூடுகின்றனர், அவனருள் பெற்று அவனியில் நம்முடன் வாழும் பொருட்டு. வருடம் ஒருமுறை இவ்வாறு விஜயம் செய்து தனது வாழ்த்

தையும் வணக்கத்தையும் ஆண்டவனுக்குத் தெரிவித்துக் கொள்ள ஆதவன் தவறுவதே இல்லே! என்னே இயற்கையின் விந்தை!

இந்நிகழ்ச்சி செவ்வனே நடைபெறும் வகையில் கோயி லின் கோபுரஅமைப்பு அமைந்துள்ளது. இங்ஙனம் இணை யற்ற வகையில் கட்டிடக்கலேயில் கைவரப்பெற்றிருந்த நம் முன்னேர்களது பெருமையை எண்ணி நாம் இறும்பூதெய் தலாம்.

**சிலசெய்திகள்:**

ஒருவித சாதாரண படரும் பசுங்கொடிகளோடு கூடிய ஓங்கி உயர்ந்த மதிற்சுவருக்கு அப்பால் அமைந்துள்ள பாசி நிரம்பிய குளம் கோயிலின் பழமையைப் பறைசாற்றும் வகையில் அமைந்துள்ளது. இக்கோயிலில் ப்ரம்மா, லக்ஷ்மி, சரஸ்வதி, அங்காரகன், தர்மபுத்திரர் ஆகியோர் ஆண்ட வனேத்தரிசித்துப் பேறுபெற்றதாகச் சொல்லப்படுகிறது.

தேவேந்திரன் ஒருசமயம் தனது நாட்பட்ட வியாதி யால் வருந்தி, பின்னர் இக்கோயிலின் திருக்குளத்தில் ஸ்நா னம் செய்து ஆண்டவனே வழிபட்டுச் சரணடைந்தான். ஆண்டவன், வைத்தீஸ்வரர் அல்லது வைத்திய நாதராக அவ தாரம் செய்து இந்திரனின் நோய்தீர்க்கிருர். இறைவனே, வைத்தியர்களின் ராஜாவாக அல்லது தலேவராகக் கொள்வதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்க முடியாதே! இந்திரனின் வேண்டுகோளுக்கிணங்கி, வைத்தீஸ்வரர், நம்பிக்கையோடு திருக்குளத்தில் மூழ்கி தன்னேவணங்கும் அன்பர்களின் பிணி நீக்கி அவர்கள் உடல் நலத்தோடு இருக்க அருளிவருகிருர். ஆண்டவனின் கருணேயே கருணே!

இக்கோயிலில் எழுந்தருளியுள்ள அம்பிகையின் பெயர் தையல் நாயகி என்ற பாலாம்பிகையாகும். இக்கோயிலின் ஸ்தல விருட்சமாக இருக்கும் பேற்றினேப் பனேமரம் பெற் றுள்ளது!

ஆண்டவனே வழிப்பட்டு அருள்பெறும் பொருட்டு ஆதி சங்கர பகவத்பாதர் இக்கோயிலுக்கு வந்ததாகக் கூறப்படு

கிறது. ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்தவையாகச் சொல்லப் படும் 'யந்த்ரங்கள்' (YANTRAS) சில இன்றளவும் பெருமதிப் போடு போற்றிப் பாதுகாக்கப் படுகின்றன. ஆதிசங்கரரின் விஜயம் இக்கோயிலின் சிறப்பிற்கு மேலும் பெருமை சேர்ப் பதாயுள்ளது.

இக்கோயில் மிகவும் பழமையானது. சுமார் ஆயிரம் வருடங்களுக்கு முன்னுல் இக்கோயில் தோன்றியது என்ற உண்மையை நிருபிக்கும் வகையில் சில கல்வெட்டுக்கள் (இக் கோயிலில்) காணப்படுகின்றன. கலேப்பணிக்குப் பெயர் போன சோழமன்னர் சிலர் இக்கோயில் பராமரிப்பில் பெரிதும் அக்கரைகொண்டு ஆண்டவனின் கோயிலே அழகுற நடத்தியதற்கான ஆதாரங்களும் கல்வெட்டுக்களில் காணப் படுகின்றன.

கோயிலில் காணப்படும் சித்திர-சிற்பவேலேப்பாடுகள், கலேயன்பர்களுக்கும் ஓவியர்களுக்கும் சிறந்த சிந்தனே விருந் தாக அமைந்துள்ளன.

முன்னர் விவரிக்கப்பட்ட 'சூரியஒளிஅபிஷேக' விழா சமயத்தில் பக்தர்கள் பெருமளவில் கூடுகின்றனர். இது தவிர (மாசி மாதத்தில்) சிவராத்திரி, கார்த்திகை, முதலிய தினங்களில் விசேஷ பூஜைகள் நடைபெறுகின்றன. இச் சமயங்களில் பக்தர்கள் எண்ணற்றவர் வந்து-ஆண்டவனேத் தரிசித்து அவனருள் பெறுகின்றனர்.

செவ்வாய்க்கிழமை தோறும் ஆண்டவனுக்கு விசேஷ பூஜைகள் நடைபெறுகின்றன. இச்சமயம் கலேத்திறன் மிகுந்த கைகளால் அலங்கரிக்கப்பட்டு ஆண்டவன் அற்புத மானதும் ஆனந்தமானதுமான கண்கொள்ளாக்காட்சி தரு கிருன்.

காலத்தின் வினேவாகப் பாதிக்கப்பட்டுள்ள கோவிலும் கோவில் குளமும் விரைவில் புனருத்தாரணம் செய்யப்பட வேண்டிய நிலேயில் உள்ளன. பக்தி மிகுந்த தர்மகர்த்தா

*(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)*

# சிதம்பர மும்மணிக்கோவை

## உரைநடை

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்,
பாலகவி
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

( மலர் 19 இதழ் 4-ன் தொடர்ச்சி )

அமரர் கோமகன் அரும்பெறல் வாழ்க்கையும்
இருநிதிக் கிழவன் ஒருபெரு வெறுக்கையும்
ஐங்கணைக் கிழவன் துஞ்சா நலனும்
ஒருவழிக் கிடைப்பினும் வெருவந்து கலங்கிக்
கைத்தூண் வாழ்க்கை உத்தம யோகிகட்
எத்திறம் வைகினும் இடையூ றின்றே யானே
வளியுண் புளிப்பும் பித்துண் கைப்பும்
ஐயுண் மதுரமும் அல்லன பிறவும்
நாச்சுவை அறிய நல்கின மேற்சென்
றதுவது வாக அழுந்திப் புதிதுண்டு
கழிபெரும் காமம் மூழ்கி முழுவதும்
பாவமும் பழியும் மேவுல தல்லது
செம்பொருள்தெரிந்து சிற்றறி வொரீஇ
ஐம்புலன் அடக்கி அறந்தலை நின்று
தீநெறி விலக்கி நன்னெறிப் படர்தற்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

பரம்பரையினர் கர்மசிரத்தையோடு இக்கோயிலை நிர்வகித்துப் பாதுகாத்து வருகின்றனர். எனினும் முதியதோர் கோவில் பணி என்பது, பக்தகோடிகள் பலரும் கவனிக்க வேண்டிய மாபெரும் பணியாயிற்றே! யானைப் பசிக்குச் சோளப்பொறி போதுமா!

அனைவரும் ஒருமுறையாகினும் சென்று பூந்தமல்லி வைத்தீஸ்வரரைத் தரிசித்து அவனருள் பெற்று அவனியில் சிறப்போடு வாழ முற்படுவோமாக.

---

குரனில் காட்சி இமுதையன் ஆதலில்
பூவாது பழுக்கும் சூலடிப் பனசம்
பார்கிழித் தோடிப் பணியுல களந்த
வேர்தொறும் வேர்தொறும் வெவ்வேறு பழுத்து
முட்புறக் கனிகள் தூக்குவ தொட்பமொடு
பதஞ்சலி முனிவனைப் பார்கொளத் தந்த
பிலங்கொளக் கொடுக்கும் பலங்கள்பல நிகர்க்கும்
மல்லலம் பொழில்சூழ் தில்லை வாண
வரமொன் றிங்கெனக் கருளல் வேண்டும் அதுவே
பெருங்குளிர்க் குடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத் திசைத்த ஒருதுணி அல்லது
பிறிதொன் றுகிடையா தாக வறுமனைக்
கடைப்புறத் திண்ணை யல்லது கிடக்கைக்
கிடம்பிறி தில்லை யாக கடும்பசிக்
குப்பின் றட்ட புற்கையூண் அல்லது
மற்றோர் உண்டி வாய்விட் டரற்றினும்
ஈகுநர் இல்லை யாகநாள் நாளும்
ஒழுக்கம் நிறைந்த விழுப்பெரும் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைக இத்திறம்
உடல்நீங் களவும் உதவிக் கடவுள்நின்
பெரும்பதம் அன்றியான் பிறிதொன்
றிரந்தனன் வேண்டினும் ஈந்திடா ததுவே. 8

தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனது பெறுதற்கரிய உயர்ந்த வாழ்வும், பெரும்பொருளுரிமையாளனாகிய குபேரனது ஒப்பற்ற பெரிய செல்வமும் ஐந்து மலர்க்கணைகளை உடையவனாகிய மன்மதனது குறைவில்லாத அழகும் ஒருங்கே வந்து கிடைத்தாலும் அஞ்சிக் கலங்கிக் கையிற் பெற்ற உணவை உண்டு வாழும் உத்தமமான யோகிகளுக்கு, எப்படியிருந்தாலும் இடையூறு இல்லை. யான், வாதத்தின் தொடர்பையுடைய புளிப்புச் சுவையையும் பித்தத்தின் தொடர்பையுடைய கைப்புச் சுவையையும் கபத்தின் தொடர்பையுடைய தித்திப்புச் சுவையையும் இவையல்லாத ஏனைச் சுவைகளையும் நாச் சுவையறியும்படியாகக் கொடுத்தவற்றின் மேலேசென்று அதுவதுவாக அழுந்திப் புதியனவற்றை உண்டு, மிகப்பெரிய ஆசையில் முழுகி முழுப்பாவத்தையும் பழியையும் பொருந்துவதல்லாமல் செம்பொருளைத் தெரிந்து சிற்றறிவு நீங்கி ஐம்புலனை அடக்கி அறநெறியில் நின்று தீவழி விலக்கி நல்வழி

செல்லுதற்கு வலிமையில்லாத அறிவையுடைய கீழ்மையை உடையேனுதலின் பூவாமல் காய்த்துப் பழுக்கின்ற அடியிலே கருப்பத்தையுடைய பலாமரம் பூவுலகத்தைக் கிழித்தோடி நாகலோகத்தை அளந்த வேர்களில் எல்லாம் வெவ்வேருகப் பழுத்த முட்களைப் புறத்திலேயுடைய பழங்களைத் தூக்குவது, அறிவோடு பதஞ்சலிமுனிவரை இவ்வுலகிற்கு உதவிய நன்றியை நினைந்து நாகலோகத்திற்கு அப்பழங்களைக் கொள்ளுமாறு கொடுப்பதை ஒத்த வளம் பொருந்திய அழகிய சோலைகள் சூழ்ந்த தில்லைவாணரே! இங்கே எனக்கு ஒரு வரத்தை அருளுதல் வேண்டும். அது என்ன எனில்; பெரிய குளிருக்கு வருந்தும் வேளையில் அழுக்குத் துணிகள் பல வற்றைத் தொடுத்துத் தைத்த ஒரு துணியையல்லாது வேறென்று கிடையாதிருப்பதாக. பாழ்வீட்டின் வாயிற் புறத்திண்ணையல்லாது படுப்பதற்கு வேறு இடம் கிடையாதிருப்பதாக. கடுமையான பசிக்கு உப்பில்லாமல் சமைத்த புல்லரிசிக்கூழ் அல்லாமல் வாய்விட்டு அலறினும் வேறோர் உணவை வழங்குபவர் இல்லையாக. நாள்தோறும் ஒழுக்கம் நிறைந்த சிறந்த பெரிய கேள்வியையுடைய உண்மைத் தவ முடையார் கூட்டத்தோடு பொருந்த இந்தத் தன்மையை உடல் நீங்கும் காலம் வரை உதவிக் கடவுளே! நினது பெரிய திருவடிகளையன்றி வேறொன்றை யான் இரந்து வேண்டினும் ஈயாதிருப்பதாகிய இதுவேயாகும்.

வேதண்ட மேபுயங்கள் விண்ணே திருமேனி
மூதண்ட கூடமே மோலியாம் — கோதண்டம்
ஒற்றைமா மேரு உமாபதியார் நின்றாடப்
பற்றுமோ சிற்றம் பலம். 9

உமாபதியாகிய கூத்தப் பெருமானுக்கு மலைகளே தோள்கள். ஆகாயமே திருமேனி, பெரிய அண்டகூடமே திருமுடி, ஒப்பற்ற மேருமலையே வில். இங்ஙனம் பெரிய திருவுருவத்தையுடைய இவர் நின்று ஆடுவதற்குச் சிற்றம் பலம் போதியதாகுமோ?

பற்றம் பலமிதித் துத்துதித் தேசெவ்வி பார்த்துப்புல்லற்
வெற்றம் பலந்தொறும் மெய்யிளைத் தேறுவர் வீணர்கெட்டேன்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஆறுந்தந்திரம் Tantra the Sixth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

---

( மலர் 19. இதழ் 7-ன் தொடர்ச்சி )

### அருள் பூத்தபின் தவம் வேண்டா
### When Grace blossoms, tapas ceases

47. உழவன் உழவுழ வானம் வழங்க
உழவன் உழவினிற் பூத்தது வேளை
யுழவ னுழத்தியர் கண்ணுக்கு மென்றிட்
டுழவ னதனை யுழலொழிந் தானே.

The ploughman ploughed; the heavens poured;
And in the ploughman's ploughing, in time it flowered;
The ploughman then for the ploughwoman left
To watch, and guard and tender;
The ploughman thus for ever ceased
All efforts ploughing further.

துறவியாம் உழவன் தவமாகிய உழவைச் செய்ய, அருளாம் மழை பெய்ய, ஞானமாம் மலர்பூக்கின்றது. அந்த நிலை

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

குற்றம் பலபொறுத் தென்னையு மாண்டுகொண் டோன்புலியூர்ச்
சிற்றம் பலங்கண்டு பேரம் பலத்தைச்செய் யாதவரே. 10

பல்லினால் மென்று துப்பிய தாம்பூல எச்சிலை மிதித்துத் துதிகூறிச் செல்வியை நோக்கி அற்பர்களது பயனற்ற சபை தோறும் சென்று உடலிளைத்து வீணர்கள் வருந்துபவர்கள்; கெட்டேன். குற்றங்கள் பலவற்றையும் பொறுத்துக் கடையவனாகிய என்னையும் ஆண்டு கொண்டவனாகிய புலியூரனது சிற்றம்பலத்தைத் தெரிசித்துப் பெரிய அழகிய வீட்டை அடையாதவர்களாவார்கள்.

---

(தொடரும்)

யிலே, இறைவன் சத்திகள் பாதுகாத்தருள்வரென்று, ஞானி தவம் செய்தலை ஒழித்தான்.

குறிப்பு வரி-1. உழவன்-துறவி: உழவு-தவம்; வானம்-அருள்.
வரி-2. பூத்தது-ஞானம் முற்றியது.
வரி-3. உழத்தியர்-சத்திகள்.
"தவம் வேண்டா ஞான சமாதிகை கூடில்" என்று 1632-ம் பாட்டில் மேல் குறிப்பிடுவதை நோக்குக.

## துறந்தவர்க்கே முத்தி நிலை
## Liberation is for the Renunciate alone

48. மேல்துறந் தண்ணல் விளங்கொளி கூற்றுவன்
நாள்துறந் தார்க்கவன் நண்ப னவாவிலி
கார்துறந் தார்க்கவன் கண்ணுத லாய்நிற்கும்
பார்துறந் தார்க்கே பதஞ்செய லாமே.
The Lord renounced all;
He is the Shining light above;
He is the friend of all,
Whose days Death has numbered;
He is devoid of desires
The guiding light of all those
Who darkness renounced;
Only to those who this world abandoned,
May His Feet within reach be.

இறைவன் துறவிகளுள் மேலானவன்; ஒளியாக விளங்குபவன்; இறப்பினை அஞ்சுபவர்க்கு நண்பன்; விருப்பற்றவன்; மல இருளைக் களைந்தவர்க்கு கண்போன்று வழிகாட்டுபவன். உலகத்தைத் துறந்தவர்களுக்கே அவன் பாதங்கள் எளிவரும்.

குறிப்பு வரி-4. பதஞ்செயலாமே-பாதங்கள் அடைதலாகும். முத்திப்பதம் முற்றும்-என்றுகும்.

## ஐம்புல ஆட்டம் ஓய, மனம் ஒருமைப்படும்
## When the distractions of the senses cease, mind gets fixed

49. நாகமும் ஒன்று படம் ஐந்து நாலது
போகமுட் புற்றிற் பொருந்தி நிறைந்தது
ஆகமிரண்டும் படம்விரித் தாட்டொழிந்
தேகப்படஞ் செய் துடம்பிட மாமே.

One serpent, five its hoods
It fills the hole of enjoyment four;
In its twain body, subtle and gross
It raised its hoods and danced away;
Then into a single hood it merged,
Tho the very body within.

ஆன்மாவாகிய ஒரு நாகப்பாம்பு. புலன்களாகிய ஐந்து படங்களைக்கொண்டதாய், நான்கு போகங்களாகிய புற்றில் நிறைந்திருந்தது. தூலம், சூக்குமாகிய இரு உடம்பிலும் படமெடுத்தாடி ஓய்ந்து நின்றது. அந்த ஆட்டம் ஓய்ந்ததும், மன ஒருமைப்பாடாகிய படம் அதன் உடம்பினுள்ளேயே பிறந்தது.

குறிப்பு வரி-1. நாகம்–ஆன்மா. படம் ஐந்து–ஐம்புலன்கள்.
வரி-1-2. நாலது போகம்–அறம், பொருள். இன்பம், வீடென்பர். ஆனுல் வீடென்பது புலன் போகத்தில் பெறப்படாததால். உண்டிப்போகம், பெண்டிர்ப்போகம், பொருட்போகம், அரச (அதிகார) போகம் என்பனவு பொருத்தமாகும்.

## அவன் எவ்வாறு வருவானென்று யாரறிவார்?
## None Knoweth how He Cometh

50. அகன்ருர் வழிமுத லாதிப் பிரானு
மிவன்ரு னெனநின் றெளியனு மல்லன்
சிவன்ருன் பலபல சீவனு மாகு
நயன்ருன் வரும்வழி நாமறி யோமே.

The Primal Lord is the first of Renunciates;
In that thought is little comfort
Not that easy may He come by;
Many, many lives may it take
For Siva's feet to reach;
Who Knoweth how and when the loved one cometh?

உலகத்தைத் துறந்தவர்களுள்ளெல்லாம் இறைவனே ஆதியானவன்; ஆயினும், இவ்வளவுதானே என்று அவனை எளிமையாக நினைப்பதற்குமில்லை; சிவனடி சேர்வதற்கு எத்தனையோ உடலெடுக்க வேண்டிவரினும் வரும். அன்பனுகிய அவன் எவ்வழி வருகிருன் என்பது நமக்குத் தெரியாதே.

குறிப்பு வரி-1. அகன்ருர்-துறந்தார்.

### துறந்தவர் ஞானப்பூ உடலுள் கண்டனர்
### The renunciate espied the mystic flower in the body

51. தூம்பு திறந்தன ஒன்பது வாய்தலும்
ஆம்பற் குழலியின் கஞ்சுளிப் பட்டது
வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூரையிற்
கூம்பேறி கோயிலிற் பூக்கின்ற வாறே.

The mystic exit opened,
And the nine orifices were sheathed in armour
Of the Sakti of the lily-bedecked tresses;
The Captain that is the breath of life
Climbed the mast of negation bitter,
And looked atop from the cranium roof;
And lo! beheld the budded vine bloom,
As in temple sacred,

யோகப் பயிற்சியிலே உச்சிக்கும் உள்நாக்கும் நடுவேயுள்ள மடை திறக்கப்பெற்றது. ஆம்பலை அணிந்த கூந்தலையுடைய சத்தியின் சட்டை, உடம்பின் ஒன்பது வாயில்களையும் அடைத்தன. யாவற்றையும் வேம்பென வெறுத்தனன் துறவி. பிராணவாயுவாகிய மீகாமன் கூரையாகிய ஆயிரமிதழ் கொண்ட சகஸ்ரதாராவை அடைந்தனன். மொட்டுகள் மிகுந்து ஞானமலர் கோயிலில் பூத்து நிற்பதைக் கண்டான்.

குறிப்பு: துறந்தோர், யோகப்பயிற்சியால் பிராணனை சுழுமுனையூடு மேலே செலுத்தி, உச்சிக்கும் உண்ணாக்குக்கும் நடுவேயிருக்கும் ஆதார தெரிசனம் பெறுவர்.

———

(தொடரும்)



# கட்டளை விளக்கம்

திருநெறியதமிழ்மணி
வித்துவான். திரு. தா. குருசாமி ஓதுவார் அவர்கள்,
3. சொக்கப்பநாயக்கர் தெரு, மதுரை - 1.

---

**முன்னுரை:**

உலகம் ஞானத்தை உணர்ந்தவர்களுக்கு உயர்ந்த மதிப்பை அளித்தது. அந்த ஞானத்தை அளிக்க வல்ல தத்துவ சாத்திரங்கள் இந்திய நாட்டில் பல் கோடியாக விளங்குகின்றன. வேத வேதாங்கங்கள், உபநிடதங்கள், ஸ்மிருதிகள், ஆகமங்கள், அதனை ஒட்டிய தோத்திரங்கள் ஆகிய ஞான நூல்கள் பாரத நாட்டை அணி செய்வதைப்போல வேறு எந்த நாட்டையும் அணி செய்யாது. ஒவ்வொரு சமயத்தவருக்கும் ஆன்மாக்களின் கன்மத்திற்கு ஈடாக இறைவன் பல சமயங்களை வேதத்தில் வகுத்து வைத்தனர். அவ்வேதம் காரணமாகவே ஒவ்வொரு சமயத்தவருக்கும் ஏற்பட்ட சாத்திரங்கள் பலவாயின.

**கட்டளையாது ?:**

சமங்களில் கையாளப்படுகின்ற (பரிபாஷை) குழூஉக் குறிச் சொற்கள் சாதாரண மக்களுக்கு விளங்க இயலாதவாறு இருப்பதால் அவ்வச்சமயங்களில் வல்ல பெரியவர்கள் தங்கள் தங்களுக்கு உரிய சாத்திரங்களுக்குப் படி முறையாக எளிய வசன நடையில் பல்வேறு கட்டளைகளை யாத்திருக்கின்றார்கள். இந்நூல்கள் திருவாலவாய்க் கட்டளை முதலாகப் பல்வேறு கட்டளைகளை உடையன. அவற்றுள் இங்கு திருவாலவாய் கட்டளை ஒன்றை மட்டும் எளியமுறையில் ஆராய்ந்தறிவோம் கட்டளை என்பது வரையறை. Definition - என்ற ஆங்கிலச் சொல்லிற்கு இணையானது.

**பதிவிளக்கம்:**

திருவாலவாய்க் கட்டளையில் பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் தொன்றுதொட்டே நிலைத்து விளங்குவன என்று தோற்றுவாய் செய்யப்படுகிறது. பதி என்று சொல்லப்படுவது இறைவனுவார். அது ஒன்ருகவும், பரிபூரணமாகவும், அறிவுக்கு அறிவாகவும், நின்மலமாகவும், நீருக்கு உயிராகவும் குறியுங் குணமுமில்லாதாகவும், அருவும் உருவும் அருவுருவமாகவும், இவை அல்லாததாகவும், அகண்டிதமாகவும், ஆநந்தமாகவும் விளங்குவது.

**பதி தொழிற் படலம்:**

இங்ஙனம் விளங்குகின்ற பரமசிவமும், பராசத்தி, ஆதி சத்தி, இச்சா சத்தி, ஞான சத்தி, கிரியா சத்தி என்ற ஐந்து சக்திகளாகிய அருளும், பின்னமில்லாமல் சூரியனும், அதன் ஒளியும் போல ஒன்ருய் இருக்கும். இவ்வாறிருக்கிற பதி ஆன்மாக்களைக் காக்கும்பொருட்டு அருவமாகிய சிவம், சத்தி, நாதம் விந்து நான்கும் அருவுருவமாகிய சதாசிவம் ஒன்றும், உருவமாகிய மகேச்சுரன், உருத்திரன் இருவரும், இவர்கள் அதிகாரத்தால் நடக்கும் பிரம, விஷ்ணுக்கள் இருவரும் ஆக ஒன்பது மூர்த்திகளுமாய் சுத்தமாயை, அசுத்தமாயை, சுத்த சுத்தமாயை ஆகிய உபாதானத் திரவியங்களைக் கொண்டு சிருட்டித்தும், திதித்தும், சங்கரித்தும், திரோபவித்தும் அநுக்கிரகித்தும் இங்ஙனம் பஞ்ச கிருத்தியங்களைச் செய்ய நிற்கும். எங்ஙனஞ் செய்யுமெனின் தன்மை முன்னிலை படர்க்கையாய் நின்றியற்றும்.

**இவற்றுள் தன்மையாவது:—** பரிபூரணமாய் இருக்கை ஆகும். முன்னிலையாவது;— இச்சா, ஞான, கிரியைகளாய் இருக்கை ஆகும்.

படர்க்கை யாவது:— மனம், புத்தி, அகங்காரம் சித்தம், உள்ளம் ஆகிய ஐந்து; அகாரம், உகாரம், விந்து, நாதம், ஆகிய ஐந்து; பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன் ஆகிய பதினைந்துமாய் இருக்கை ஆகும். பிரபஞ்சம் இவ்விடங்களில் எவ்வாறு காரியப்படும் எனின் இவற்றுள் காரணங்களை அக்கரங்கள் செலுத்த, அக்கரங்களை மூர்த்திகள் செலுத்த, மூர்த்திகளை இச்சா ஞானக் கிரியைகள்

செலுத்த, இங்ஙனம் காரியப்படும். இவ்வாறு பிரபஞ்சத்தைக் காரியப்படுத்துகையிலேயும் அந்தச் சிவம் அதிற்ருக்கற்று நிற்கும்.

**பசுவிளக்கம்:**

இது வரையில் பதியிலக்கணத்தை விரித்துரைத்த திருவாலவாய்க்கட்டளை. இனி பசு இலக்கணத்தைப் பற்றி கீழ் வருமாறு பேசுகின்றது.

**ஆன்மாக்கள்:—** விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும். அவற்றுள் விஞ்ஞானகலர் என்பது:— ஆணவ மலமொன்றே உடையவர்கள் இவர்களுக்கு இறைவன் அறிவிலிருந்து திருவருள் உதிப்பித்து ஆணவ மலத்தைப் போக்கிக் காப்பார். பிரளயா கலர்:— இவர்கள் ஆணவம், கன்மம் ஆகிய இரண்டு மலமுடையவர்கள். இவர்களுக்கு இறைவன் அனுக்கிரகிக்கும் முறையாவது உருவத்திருமேனி கொண்டு இரு மலத்தைப் போக்கி இரட்சிப்பான், **சகலர்:—** இவர்கள் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலமுடையவர்கள். இவர்களுக்கு மலபரிபாகம் வந்த விடத்து இருவினையொப்பும் பிறக்கும். அப்பொழுது முன்செய்த சிவம்புண்ணியம் வந்தெய்த அப்பரமசிவம் சரியை கிரியை யோகங்களை அநுட்டிப்பித்து நிருவாண தீட்சை பண்ணி ஞானம் அனுக்கிரகித்து, மலமாயா கன்மங்களை நீக்கி மோட்சத்தைக் கொடுக்கும். இவ்வாறு பசுவின் இலக்கணம் பலபடியாக விரித்துப் பேசப்படுகிறது. அதேபோல பாச இலக்கணத்தை திருவாலவாய்க் கட்டளை கீழ்க் கண்டவாறு விளக்குகிறது.

**பாசமாவது:—** ஆன்மாக்களுக்கு அநாதியிலேயே பந்தமாயிருக்கிற ஆணவம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை திரோதாயி என ஐவகைப்படும்.

**ஆணவமாவது:—** ஒன்ருகவும், பரிபாகத்திலே நீங்கும் சத்தியுடையதாகவும், மூலமலமாகவும், இருளும் ஒளியும் போல* இரண்டாகவும், வியாபகமாகவும், சிவத்தையும் ஆன்

மாவையும் தெரியவொட்டாததாகவும், செம்பிற் களிம்பு போலவும், அரிசியில் தவிடு போலவும், தண்ணீரில் உப்பு போலவும், ஆன்மாவை இரண்டறக் கலந்து இச்சா ஞானக் கிரியைகள் முழுவதையும் மறையாநிற்கும்.

**கன்மமாவது:—** வியாபகமாகவும், அணுக்கள்தோறும் வேறாகவும், மனம் மொழி மெய் ஆயவற்றால் அறிந்தும் அறியாதும் இயற்றுவதனால் வந்தேறுகின்ற புண்ணிய பாவங்களாகச் சுக துக்கங்களைப் பண்ணுவதாகவும், அநுபவித்தாலன்றித் தீராததாகவும், விதிப்படி பரிகாரம் செய்தால் நீங்குவதாகவும், நெல்லுக்குள் முளைபோல ஆன்மாவிற் பற்றியிருப்பதாகவும், சங்கிலித் தொடர்ச்சியாய் அழிந்தும், ஆகியும் வருவதாகவும், பிரவாகத்து அலைபோல்வதாகவும், சிருட்டி காலத்தே காரியப் படுவதாயிருக்கும். இக்கன்மம் சஞ்சிதம், பிராரர்த்தம், ஆகாமியம் என மூவகைப்படும்.

**சஞ்சிதம்:-** அநாதிதொட்டுச் சனனங்கள் தோறும் ஈட்டிய வினையைப் புசித்து விஞ்சியதாகிய ஆறு*அத்துவாக்களிலும் கட்டுப்பட்டிருக்கிற புண்ணிய பாவங்களாயிருக்கும்.

**பிராரர்த்தம்:-** இந்தச் சஞ்சிதத்திற் சிறிது புசிக்கப் பாகப்பட்ட வினை ஒருசரீரத்தை யெடுப்பித்துச் சாதியாயுள்ள போகங்களைக் கொடுக்கும்.

**ஆகாமியம்:-** பிராரர்த்தம் புசிக்குமிடத்து வந்து ஏறுகிற புண்ணிய பாவங்களாயிருக்கும்.

நான்கு மலங்களின் காரியங்களை ஏவி ஆன்மாக்களுக்குப் பிரபஞ்சமாகிய பொய்யை மெய்யென்று சுவைப்படுத்தி நிற்பதைத் திரோதாயி என்று சொல்வர். அஃதும் பாசமேயாம்.

**சுத்தமாயை:-** விஞ்ஞான கலருக்கும் பிரளயாகலருக்கும் தநுகரண புவன போகமாய் இருப்பது சுத்தமாயை.

**அசுத்தமாயை:-** சகலருக்குத் தநுகரண புவன போகங்களாயிருக்கும்.

**தத்துவங்களின் தோற்றம்:**

சுத்தமாயை அசுத்தமாயை ஆகிய இருவகை மாயையிலும் முறைப்படி தத்துவங்கள் தோன்றுகின்றன. இவை பின்னர் விளக்குதற்குரியவை. அத் தத்துவம் ஆன்மதத்துவம், சிவதத்துவம், வித்தியா தத்துவம் என வகைப்படுத்தப்படும். இவையும் பின்னர் விளக்குதற்குறியதாம்.

முடிவுரை:

ஒருவாறுகத் திருவாலவாய்க் கட்டளையில் பதி, பசு, பாச இயல்புகள் - பரிபாஷைச் சொற்கள் நன்கு விளக்கப்படுகின்றன. இக்கட்டுரையில் பதி, பசு, பாச இயல்புகளில் சிலவே விளக்கப்பட்டன. எளிய கருத்து விளக்க முறை சித்தாந்தக் கட்டளைகளில் காணலாம். அடுத்த கட்டுரையில் தத்துவவிளக்கம் ஆராயப்படும்.



* "ஆன்ம சித்சத்தியை மறைத்தலால் இருளும் பிரகாசமென்று சொல்லும்படி மிகக் கறுத்துள்ளது ஆணவமலம் எனப்பொருள்"—Extract to TIRUVALAVOY KATTALAI—Page, 26.

* அத்துவா ஆறுவன:- மந்திராத்வா, பதாத்துவா, வர்ணத்துவா புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்பன. Page—26, 27.

# அஞ்சுள சிங்கம்

சி. அ.

உலகில் உள்ள பிறப்புக்களில் கொடுமை வாய்ந்த பிறப்பாகக் கருதப்படுவது மிருகப் பிறப்பு. மக்களிலும் கொடுமையுடையவர்களை—பண்பாடு இல்லாதவர்களை, 'மிருகத் தன்மையுடையவர்கள்' என்று கூறுதல் வழக்கம். மிருகங்களிலும் நாட்டில் மக்களுடன் வாழும் மிருகங்கள் ஓரளவு அமைதியும், பண்பும் உடையனவாய் இருக்கும். காட்டில் வாழும் மிருகங்கள் அவ்வாறின்றி, மிகவும் கொடியனவாய் இருக்கும். காட்டு மிருகங்களில் யானை சாக பட்சிணியே; மாமிச பட்சிணியன்று. இருப்பினும், காட்டுயானைகள் கொடிய சுபாவம் உடையவைகளே என்பது யாவரும் அறிந்தது. சாக பட்சிணியான மிருகமே கொடியதாய் இருக்கிறதென்றால், மாமிச பட்சிணிகளான மிருகங்கள் எவ்வளவு கொடியவையாய் இருக்கும்!

'கரடி, புலி, சிங்கம்' என்பன கொடிய மிருகங்களில் முதன்மையானவை. அவைகளிலும் சிங்கமே தலைமையானது. சிங்கத்தை வேறு எந்த மிருகமும் வெல்லாது; சிங்கம் ஏனைய எல்லாவற்றையும் வென்றுவிடும். அதனால் சிங்கத்திற்கு, 'மிருகேந்திரன்' என்ற பெயரும் உண்டு.

ஒரு காட்டில் ஒரு சிங்கம் இருந்தாலே அங்குள்ள மற்ற மிருகங்களுக்கும், அருகில் வாழும் மனிதர்களுக்கும் உண்டாகின்ற அச்சத்திற்கும், துன்பத்திற்கும் அளவில்லை. ஐந்து சிங்கங்கள் ஒருகாட்டில் வாழுமானால், சொல்லத் தேவை இல்லை. சிங்கத்திற்கு மற்ற மிருகங்களையும், மக்களையும் அடித்துக் கொன்று வெற்றிபெறுதற்கு ஆயுதமாக அமைந்திருப்பவை, அதன் உறுதியான கூரிய நகங்களும், பற்களுமாம். சிங்கம் கொடிய மிருகமாயினும் அதைக் கொல்வதும் பாவந்தான். ஆகையால் சிங்கத்தைப் பிடித்து, அதன் நகத்தையும், பற்களையும் அறுத்துவிட்டால் துன்பம் ஏதும் இல்லை.

பின்பு அது நாம் சொன்னபடி கேட்கும்; கொடுத்த உணவை உண்டு வாழும்; முன்போலக் கொழுத்துத் திரிதல் இயலாது.

இப்படி ஓர் ஐந்து சிங்கங்கள் ஒரு காட்டிலே வாழ்கின்றன என்றும், அவைகள் ஐந்து குகைகளில் வாழ்கின்றன என்றும், வெளியேபோய் மேய்ந்துவிட்டு மீண்டும் அந்த ஐந்துகுகைகளிலே வந்து சேர்ந்துவிடும் என்றும், அவைகளைப் பிடித்து அவற்றின் நகங்களையும், பற்களையும் அறுத்தெறிய வேண்டும் என்றும், அப்பொழுதுதான் மக்கள் நன்மையடைய முடியும் என்றும் திருமூலர் கூறுகின்றார். அந்த ஐந்து சிங்கங்கள் எவை ? ஐம்பொறிகள். அவையாவன, ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்பவற்றை அறியக் கூடிய சக்திகள். அவைகள் வாழும் காடு எது ? தூல தேகம். ஐந்து குகைகள் எவை ? காது, தோல், கண், நாக்கு, மூக்கு என்னும் உறுப்புக்கள். அவைகளுக்கு உணவு, முன் சொன்ன ஓசை முதலிய புலன்கள். அப்புலன்களை யுடைய பொருளே அவை சென்று மேயும் இடங்கள். அச்சிங்கங்களுக்கு உள்ள நகமும், பற்களும் எவை ? ஐம்புல ஆசை. ஐம்பொறிகளை, யோகத்தினாலும், ஞானத்தினாலும் கட்டுப்படுத்தி, அவற்றின் வழிச்செல்லும் ஆசையை அறுத்தால் இறைவனை அடைந்து இன்பம் பெறலாம். ''உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான் — வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து'' என்றும், ''தொண்டர் அஞ்சு களிறும் அடக்கி'' என்றும் பல இடங்களிலும் யானையாகக் கூறப்படும் ஐம்பொறிகளைத் திருமூலர் சிங்கமாக வைத்து வெளியிடும் திருமந்திரம் இது:—

அஞ்சுள சிங்கம்; அடவியில் வாழ்வன;
அஞ்சும்போய் மேய்ந்ததும் அஞ்சக மேபுகும்;
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்;
எஞ்சாது இறைவனை எய்தலும் ஆமே.
(உகிர் – நகம். எயிறு - பல்.)

இந்திருமந்திரத்தின்வழி ஐம்பொறிகளை அடக்கி, ஐம்புல ஆசையை அறுத்து, இறைவன் திருவருளைப் பெறுவோமாக.

---

*இக்கட்டுரை 'ஞானசம்பந்தம்' ஆசிரியர் அனுமதி பெற்று பிரசுரிக்கப்படுகிறது.*

# சிவநாமம் கேட்பாய், செல்வி!

திரு ஸ்ரீராமநாமப்பரதேசி அவர்கள்,
3119. East Second Street,
Pudukkottai – 1. (Trichy. Dt.)

"திருவாரூரில் பிறந்தால் முத்தி. காசியில் இறந்தால், முத்தி. தில்லையை தரிசித்தால் முத்தி" என்பார் குமரகுருபர சுவாமிகள். திருவண்ணாமலை நினைக்க முத்தி தரும் என்றும் பெரியோர் கூறுவர். அப்படிப்பட்ட திருவருணையம்பதியிலே இறைவனது நாமம் பாடிக்கொண்டே வருகின்றார்கள். "இயற்கையெழில் மிக நிறைந்தே இன்பந்தரும் அக்காலை வேளையிலே, பெண்ணொருத்தி, தன் மென்மலரமணியிலே, தன்னையறியாது இன்பமானதுயிலில் ஆழ்ந்திருக்கின்றாள்; அப்படிப்பட்டவளை தோழி ஒருத்தி துயிலுணர்த்துகிறாள். "இறைவன் நாமத்தை நாங்கள் பாடி வருகிறோம்! எப்படிப் பட்ட இறைவன் தெரியுமா? பிரமவிட்டுணுக்கள் இருவரும் அடிமுடி தேடியும் அறியமுடியாத சோதி உருவன். அரிய சோதி. பெரியசோதி. பக்தியுடன் அப்பெருமானின் பெருமையை நாங்கள் பாடக்கேட்டும் இப்படித் தூங்குகிறாயே" என்கின்றாள். இறைவனுடைய பெருமை பாடக் கேட்டால் உருகுவது தானே பெருமை என்பார் மணிவாசகர்!

வெள்ளந்தாழ் விரிசடையாய்! விடையாய்!
விண்ணோர் பெருமானே! எனக்கேட்டு வேட்டநெஞ்சாய்
பள்ளந்தாழுறுபுனலில் கீழ்மேலாக
பதைத்துருகும் அவர் நிற்க; என்னை ஆண்டாய்க்கு
உள்ளந்தாள்நின்று உச்சி யளவுநெஞ்சாய்
உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் அண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சம்கல்லாம்
கண்ணிணையும்மரமாம் தீவினையினேற்கே.

— திருவாசகம்

இறைவனைப் பாடக் கேட்டவர் என்ன நிலையை அடைவார் எனக்கூறிய மணிவாசகர் தான் அவ்வாறு செய்யாததால் தன் நெஞ்சு கல் என்கின்றார். இறைவனது தரிசனம் கிட்டியவரின் கண்ணையும் பெருமையைக் கேட்ட காதையும்

''மெய்யநின் திருமேனி கண்டபுண்ணியர் கண்கள்
மிக்கவொளிமேவு கண்கள்;
வேல! நின்புகழ்கேட்ட வித்தகர்திருச்செவி
விழாச்சுபம் கேட்கும் செவி.''

எனப்புகழ்ந்து பேசுகின்றார் ராமலிங்க சுவாமிகள். ''அழகிய கண்களையுடைய பெண்ணே! இறைவனது புகழை நாங்கள் வீதியிலே பாடி வரும்போது மெய்ம்மறந்து ஆனந்தநிலையடைய வேண்டாமா? இவ்வளவு அழகுடைய நீ செவிடா? வாள் தடங்கண் என ஒளி பொருந்திய கண்களோடு வர வேண்டிய நீ, உறங்கிய மயக்கத்தில் ஒளியிழந்து சுருங்கி இடுங்கிய கண்களோடு இருக்கலாமா! நாங்கள் எப்பேர்பட்ட தெய்வத்தைப் பாடிவருகிறோம் தெரியுமா ? பிறவிப்பிணியை ஒழித்து, முத்தி கொடுக்க வல்லதெய்வம் நான்தான் எனக் காலில் வீரக்கழலணிந்த பெரியவனையன்றோ வணங்கினோம்!

நண்ணும் பிறவி ஒழித்து உயிர்க்குலம்
சேர்முத்தி கொடுப்பதற்கு: இங்கு
எண்ணும் சமயக் கடவுளரில் யானே
வல்லன் எனப்பதமேல்
வண்ணர்திகழ் பொற்கழலணிந்து
மதுகைக் கொடியும் கட்டி: அரும்
பெண்ணம்பிகை கண்காணநடம்
செய்வான் அந்தப்பெருந் தகையே.

—வாதவூர்ப் புராணம்

இப்படிப்பட்ட தெய்வத்தை நாங்கள் பாடிவரும்போது, மெத்தையின் வாசனையிலும் மெத்தெனவிருக்கும் சொகுசிலும் படுத்திருக்கிறாளே. ''இறைவனுடைய நாமத்தை கேட்டாள்: அவனது அழகைக் கேட்டாள்: அப்பெருமானின் ஊர்பற்றிக் கேட்டாள்: அவன்மீதே பித்தேறி, தாய் தந்தை யாவரையும் துறந்து, தன்னைமறந்து தலைவனுக்கே அடிமை யானாள்''

முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னையவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னைமறந்தாள் தன்னாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே

என்ற மாதிரி ஏதும் ஆகாமல், வெறுமனேயிருக்கிறாளே! இது என்ன! எனப்பேசித் தனது தோழியை அழைக்கிறாள்.

"இறைவனது நாமங்கேட்டு உள்ளமுருகி, சிரமேற் கரங்குவித்து. கண் களிர் நீர்வார, பக்திப்பரவசமில்லாதிருக் கலாமா ? எழுந்திரு! இவ்வாறு இராதே" என ஒரு தோழி மற்றொருத்தியை அழைத்து எழுப்புவது போல மணிவாசகர் நம்மையெல்லாம் அறியாமை என்னும் உறக்கத்திலிருந்து எழுப்புகிறார். விழித்திருந்து விரைவில் இறைவனை யடைய மணிவாசகப்பெருமானை வணங்கி அருள்பெறுவோமாக.

ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ் சோதியை
யாம்பாடக் கேட்டேயும் வாள் தடங்கண்
மாதே! வளருதியோ! வன்செவியோ! நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்மறந்து
போதாரமளியின் மேல் நின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னேயென்னே!
ஈதே எந்தோழி பரிசேலோ ரெம்பாவாய்.

—திருவெம்பாவை 1.

தென்னாடுடைய சிவனேபோற்றி!
என்னாட்டவர்க்கும் இறைவாபோற்றி

---

# அன்பருக்கு அன்பன்

திரு. மா. கோபாலகிருட்டிணன் அவர்கள்,
ஆசிரியர், விருர்.

---

விரிகடல் சூழ்ந்த இப் பெரிய நற் புவனந் தன்னில் சீரும் சிறப்பும் பெருமையும் பெற்று வாழ்பவர்கள் தொண்டர்களேயாவர். அப்படிப்பட்டத் தொண்டர்களின் பெருமையை நம்மால் அளவிட்டுக் கூறுதல் என்பது முடியாத ஒன்ருகும். ஏனெனில் அத்தொண்டர்களின் உள்ளங்களை எல்லாம் தாம் வாழும் இல்லங்களாக இறைவன் அமைத்துக் கொண்டதேயாகும். ஆகவேதான் தந்தைக்கு உபதேசம் செய்த தண்டமிழ்க் கடவுளாம் முருகப்பெருமானின் விஞக்களுக்கு விடைபகர்ந்த தமிழ் மூதாட்டி ஔவையார்

> ''இறைவரோ தொண்டர் உள்ளத்து ஒடுக்கம்
> தொண்டர் தம்பெருமை சொல்லவும் பெரிதே''
> (தனிப்பாடற் றிரட்டு)

என்று கூறிச் சிறப்பித்தனர்.

மேலும் அன்பர்கள் தங்கள் உள்ளங்களிலே ஆண்டவனின் திருக்கோலத்தை நினைக்கும் தோறும் அவர்களின் நிலைக்கு இரங்கிக் காட்சி கொடுத்த பான்மையைப்பற்றி அறியாதார் எவரும் இருக்க மாட்டார்கள். நினைத்தால் முத்தி தரும் திருத்தலமாம் திருவண்ணுமலையின்கண் அவதரித்துத் தவப்பேற்ருல் திருமுருகனின் அருளைப்பெற்ற அருணகிரி நாதர் ''அன்பர் தமக்கான நிலைப் பொருளோனே'' (திருப்புகழ்) என மிக அழகாக விளக்கிக் கூறியுள்ளார்.

இவ்வாறு தமது அடியவர்களாகிய அன்பர்கள் நினைக்குந்தோறும் எழுந்தருளி அவர்களின் குறைகளை நீக்கி இன்னருள் தந்த பான்மையிஞல் தான் அன்பர்களுக் கெல்லாம் அன்பஞக இறைவன் விளங்குகிருன் என்பதனை, தம் வாச

கத்தின் மூலமாகவே அன்பர்களாக ஆக்கும் தன்மையை உடைய மணிவாசகப் பெருமான் தமது வாசகத் தேனில் ''அன்பருக்கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்'' (திருவாசகம்) என்று கூறுகின்றார்.

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயலும் தன்மை உடையவர்களைப் பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம் அத்தன் அன்பை அடிப்படையாக வைத்து அமைக்கும் பான்மையிலே வாழும் வாழ்வுதான் சிறந்த வாழ்வாக - இன்பமான வாழ்வாக, பேரின்ப வாழ்வாக அமையும். பன்னுட்டவரும் போற்றும் செந்நாப் போதாரும்,

''அன்பகத்தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று''. (குறள்)

என்றும்,

''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது''

என்றும் கூறுகிறார்.

இவ்வாறு அன்பை உள்ளத்திலே தழைக்க விட்டு தன்னிடத்தில் பற்றுக் கொள்ளச் செய்து அவ்வன்பர்கள் இதயங்களிலே அமர்ந்து இப் பூவுலகில் சைவ நெறியைத் தழைத்தோங்கச் செய்யும் ஆற்றல் மிக்கக் கண்ணுதற் கடவுளான திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள் சிவபெருமான் தன் அன்பருக்குக் காட்சி கொடுத்து அவ்வன்பரையும் அவர் தம் இல்லத் தரசியாரையும் தன்னுலகம் அழைத்துச் சென்ற இன்பமுறு காட்சியை இனிது நோக்குவோம்.

இளையான் குடியிலே பிறந்து சிவனடியார்களைப் பணிந்து சிவபூசையை இனிது நடத்திவந்தார் நாயனர். வளம் சுருங்கிய போதிலும் மனம் சுருங்காத மாறனர் இளையான். ''எதற்கும் இளையான்'' என்பதை உலகுக்கு உணர்த்த வேண்டி வறுமை நிலையிலும் தன்னை நாடிவந்தவர்களுக்கு அமுது படைத்து வந்தார். அடியவரின் பெருமையை அவனிக்கு உணர்த்த விரும்பிய முழுமுதற் கடவுள், நற்றவத்தவர் வேடம்பூண்டு, ஞாலம் உய்ந்திட நாயனர் இல்லத்திற்கு மாரிக்காலத்து இரவினிற் சென்று சேர்ந்தார், ''கொடிது

கொடிது, வறுமைகொடிது'' என்பதற்கு இணங்க உண்ண உணவின்றி வறுமைநிலையை அடைந்தபோதும், பகலில் விதைத்த நெல்லை வாரிவந்து அமுதாக்கிக் குழிநிரம்பாத புன் செய்க் குறும்பயிரைக் கைம்மை வினையினால் வேறு வேறு கறியமுதாக்கிப் பண்டை நினைவினால் குறையை எண்ணி மாறனாரும் அவர் தம் மனைவியாரும் ஒருவாறு மனம் தேறினர். இதனை,

''பண்டை நினைவெண்ணி நொந்தார் பாகஞ்செய் மாறனார்
தொண்டர் மனைவியார் சோமேசா — கண்டோம்
நயனுடையான் நல்கூர்ந் தானுதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு''

*(சோமேச முதுமொழி வெண்பா)*

என்ற பாடலால் அறியலாம்.

உள்ளம் ஒரு நிலைப்பட, தமது இல்லம் தேடி வந்து போலித்துயில் கொண்டிருக்கும் அடியவராகிய இறைவனை ''அமுது செய்தருள்க'' என்று மாறனார் எழுப்பிய ஞான்று சோதியாய் விளங்கிப், பின் ஏலவார் குழலாள் தன்னோடு இடபவாகனனாய்த் தோன்றி இன்னருள் புரிந்த பான்மையை சேக்கிழார் பெருமான் இனிது விளக்குகிறார்.

''அன்பனே அன்பர்பூசை அளித்தநீ அணங்கினோடும்
என்பெரும் உலகம் எய்தி இருநிதிக் கிழவன்தானே
முன்பெரு நிதியமேந்தி மொழிவழி ஏவல்கேட்ப
இன்பமார்ந் திருக்க என்றே அருள்செய்தான் எவர்க்கும்
மிக்கான்''

என்று கூறும் பகுதி படிக்கப் படிக்க இன்பம் பயப்பதாகும்.

ஞாலம் போற்றும் நற்றமிழ் நூலாம் திருக்குறளில் ''அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்'' என்று அன்பின் பெருமையைப் பற்றி நாயனார் விளக்கிக் கூறியுள்ளார். திருவருட்பாவின் ஆசிரியரும் அன்பு உள்ள இடங்கள் யாவும் ஆண்டவன் தங்கும் இடமாக எண்ணித் தமது நூலில்,

''அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில் புகும் அரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)



# அன்புள்ளம்

வித்துவான் திரு. த. கு. பத்மநாபன் அவர்கள்,
தமிழாசிரியன், அரசினர் உயர்நிலைப்பள்ளி,
நாயகன்பேட்டை.

---

செந்தமிழ்நாட்டின் சிறப்புக்கு எண்ணற்ற வரலாற்றுக் காவியங்கள் தீட்டப்பெற்று, அழகுக்கு அழகாய், பெருமைக் குப் பெருமையாய் புகழ் தேடித்தருவது, நமது உள்ளமெல் லாம், தமிழ் இல்ல மெல்லாம் இன்பம் தரும் இனிப்பான நிகழ்ச்சியன்றோ?

ஏட்டளவிலே, பாட்டளவிலே, இவையனைத்தும் நின்று விடாமல், எண்ணக் கூட்டளவிலே சென்று உள்ளங்கவர்ந்து, ஓங்குபுகழ் பரப்பி, நெஞ்சத்தைத் தொட்டால்தான் என் றென்றும் நிலைத்து நீங்காப்பெருமை தந்து பசுமை படர்ந்த தாக நிற்கும் நமது இலக்கியங்கள்!

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே
அன்புருவாம் பரசிவமே.'

என்றுபாடி அருளியதை நோக்குமிடத்து "அன்பேசிவம்" என்ற உண்மை நன்கு விளங்குகிறது.

இவ்வாறு அன்பின் உருவமாகவும், அன்பருக்கன்பனு கவும், விளங்கி "அன்பின் வழியது உயர்நிலை அஃதிலார்க்கு என்பு தோல் போர்த்த உடம்பு" என்ற பொய்யா மொழியின் வாசகத்தை உலகுக்கு உணர்த்தி எந்நிலை உடையோரும் தன் னிலை அடையும் வழிசெய்து அருளும் ஆண்டவனைப் பாடிப் பணிந்து இனிது வாழ்வோம்.

---

கணக்கற்ற கவிகளும், புலவர்களும் கற்ருேரும் மற்ருேரும், தீட்டியுள்ள தீஞ்சுவை ஏடுகளிலே 'அன்பு' என்பதைப்பற்றிக் கோடிட்டுக் காட்டாமல் தம் குறிக்கோளே நிறைவேற்றிக் கொள்ள விரும்பவில்லே! அன்பு-அன்பு என்று வம்படித்துக் கொண்டிருக்கிருர்களே தெம்புள்ளவர்கள்! அவ்வன்பாவது யாது? அதற்கு என்ன பொருள்? சிந்தித்துப் பார்க்க வேண்டாமா. ஆம்; சிந்திக்க வேண்டும்! சிந்திப்பதற்குத்தானே இறைவன் நமக்கு ஆருவது அறிவெனும் பகுத்தறிவைப் பரிவுடன் அளித்திருக்கிருன். ஆகையால், அப்பகுத்தறிவின் பயன் நுகர வேண்டாமா?

'நான்-நான்! என்று நாதடிக்கப் பேசுகிருன்! மனிதன், மனிதன் என்று மார்தட்டிக் கூவுகிருன்; யார் இந்த மனிதன்? செம்புனலால் குழைத்து, புலால் சுவரால் எழுப்பப்பெற்ற பொத்தைச் சிறு வீட்டின் இருட்டறையில் சிறை கிடந்தவனன்ருே மனிதன்?

'குடரும் நெய்த்தோரும், என்பும் கொழுவும், வார் வழும்பும் தோலும், தொடரும் நாடிகளும் வைத்துச் சுமத்திய தடியும் கொண்டு படர்தரச் செய்த பாண்டந்தானே இம் மனிதன். உடம்பையே தான்என்று எண்ணி மயங்குகிருன் மனிதன். இவ்வுடம்பைப் பேணி வளர்க்க வேண்டுமென்று, பாலும் பழமும், பிஸ்தாவும் பாதாம்பருப்பும் உண்டு, பழவினேக்கேற்ப நாம் சுமக்கும் கட்டையை, பாரமுள்ளதாக, கனமுள்ளதாக, ஆக்கிக் கொள்ளுகிருன்! இது சாறு நீக்கிய கரும்புச்சக்கை! தோலினுல் மூடப்பெற்ற புண்! இதனேச் சுமந்து திரிவது துன்பம் தருவதன்ருே? 'நீரிற் குமிழாகும் யாக்கை நிலேயுணர்ந்து, இறைவன் அன்பைப்பெற, அவன் எண்ணமே இவ்வுடம்பில் நிலேக்கவைத்துப் பயனுடையதாக்க வேண்டும்.

மனிதன் என்று பேர் படைத்து, புகழ் உடைத்து பெருமையுற்று, பெருநிலேக்கு உயர்ந்துள்ள நாம், உலகில் உண்டாக்கப்பட்ட பொருள்களனேத்தும் தனக்கு உறவு, உரிமை என்று சொந்தம் பாராட்டி வருகிருேமே தவிர, பிறர்படும் துன்பத்தை, மாற்ருர் உறும் மனக்கலக்கத்தை எள்ளள

வேனும் எண்ணிப் பார்த்ததுண்டா ? அதனுல் தான் வள்ளுவப் பெருந்தகை 'மாற்ருர் துயரில், துன்பத்தில், கட்ட நட்டத்தில் மனங்கலங்காதவரை 'மனிதர்' என ஒப்புக்கொள்ள மறுக்கிருர். 'அன்பு' என்னும் அமுதம் பெற்று, அல்லலுறும் பிறர் துயரினைத் துடைக்க எண்ணித்துடிக்கும் இதயமுள்ளவர்களைத்தான் 'மனிதர்' என்று மனமார ஏற்றுக்கொள்கிருர். அத்துடன் விட்டாரா 'அறிவினு ளாகுவதுண்டோ ? பிறிதின் நோய் தந் நோய் போல் போற்ருக்கடை' என்றும் கூறுகிருர்.

'என்பும் உரியர் பிறர்க்கு' என்கிருர். ஆய்ந்த முடிவைத்தான் அங்ஙனம் கூறுகிருர் போலும்! ஒரு குறும்புறவின் துன்பத்தைத் தன் துன்பமென எண்ணி, தன் உடல் முழுவதையும் அப்புருவுக்கு ஈடாக ஈந்தான் சிபிச்சக்கரவர்த்தி என்றும், தேவர்களின் தொலையாத் துன்பத்தைத் துடைக்க தேவர்களின் தலைவனும் இந்திரனுக்குத் தன்முதுகெலும்பைக் கொடுத்தார் ததீசி முனிவர் என்றும் கதைகள் சொல்வதிலும் கருத்து இருப்பதை வைத்துத் தானே என்னவோ ?

'அன்பிலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்று வள்ளுவர் கூறுகின்ருர்.

பற்றென்றே உயர்ந்த நிலையில் அன்பென்றும், மிக உயர்ந்த நிலையில் 'அருள்' என்றும் பெயர் பெருகின்றது என்று ஆன்ருேர் கூறுவர்.

மக்கட் பேற்றினை மிகுதியாகக் கொண்ட மாமுனி குசேலர், வறுமையான் வருந்தி, தன் வறுமையை விரட்டுவான் கருதிக் கண்ணன்பாற் சென்ருர், வந்தவர் நோக்கம் அறிந்த மண்ணுண்ட வாயன் அவரைக் கண்டு. களிப்பெய்தி கட்டித்தழுவி, குசேலரின் வறுமையகல வழி செய்தது அன்பின் பிணைப்பாலன்ருே ?

இறைவனிடம் மாரு அன்பு கொண்ட வேடன் கண்ணப்பர், இறைவனின் விழிகளில் குருதி வடியக்கண்டு, தன் விழிகளைப் பிடுங்கிப் பதித்து, மேனிலை எய்தியது இறைவன்பால் கண்ணப்பர் கொண்ட நீங்கா அன்பினுலன்ருே ?

மதுரைச் சுந்தரர்பால் மாருக்காதல் கொண்ட 'தருமி' எனும் அந்தணனின் நாடு வற்கடம் சென்றமையின் தான்

மணம் முடித்துக்கொள்ள பெருவிருப்பு கொண்டு, பொருட் டுணையின்றி, பன்னாள் வருந்தி, சுந்தரேசனை அடைந்து, தன் குறை கூறி வழிபட்டு, நிறைபெற்று வாழ்ந்தான்' என்று திருவிளையாடற் புராணம் கூறுவதும் ஆண்டவன் அன்பின் அரவணைப்பால் அவன் பக்தர்களிடம் காட்டிய பரிவினு லன்றோ ?

ஆண்டவன் மேலுற்ற காதலால் உள்ளம் உருகி, கண் ணீர் கசிந்து, பக்திப் பாடல்கள், தத்துவப் பாடல்கள், தெய் வமனங்கமழும் தீந்தமிழ்க் காவியங்கள் தோன்றின! திருச் சிற்றம்பலக் கோவையார், தேன் மணக்கும் தேவாரம், உள்ள முருகச் செய்யும் திருவாசகம், இரு பெரும் பாவைகள் முதலிய இறைவன் இதயத்தைக் குளிரச் செய்விக்கும் நூல்கள் கற்போர் இதயத்தைக் கனிவித்து, அரக்க மனத்தை விடுத்து, அன்பு உள்ளம் கொள்ளச் செய்யும்.

'அன்புடையவர்களின் கண்ணீரே அதைக் கூச்சலிட்டு அறிவிப்பது போலப் பிறருக்குக் காட்டிவிடும் என்பதை சிலப்பதிகாரச் செய்யுள் ஒன்றால் உணரலாம்!

'காதற் கணவனை காண்பனே ஈதொன்று
காதற் கணவனைக் கண்டால் அவன்வாயில்
தீதறு நல்லுரை கேட்பனே ஈதொன்று'

என்று கணவனை இழந்த கண்ணகி தன் அன்பின் பெருக்கால் கூறுகின்ற காட்சியாகும். இது சுயநலத்தின் அன்பேயன்றிச் சூழ்ந்திருப்போரின் துயர் அறியாது.

இல்லற வாழ்வுக்கு இன்றியமையாதது அன்புள்ளம்! அவ்வன்பு, மனைவி மக்களிடமோ, உற்றார் உறவினர்களி டமோ காட்டுவதல்ல! தன் இரத்தக்கலப்பே இல்லாத எவ்வித பந்த பாசமுமில்லாத, ஏழைகளிடம் எளியவர்களிடம், துய ருற்றவர்களிடம், தொல்லையால் அல்லலுறுபவர்களிடம் காட் டுவதே அன்பாகும்! இஃது உதட்டிலிருந்து பிறப்பதல்ல! உள்ளக் கருவூலத்தினின்று வெளிப்படுவது. அதுவே, மனி தனின் அறிவாகும்! தெளிந்த தெளிவுமாகும்.

'அரிது—அரிது-மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்கிறார் ஔவை மூதாட்டி! இக்கிடைத்தற்கரிய பேற்றினைப்பெற்ற

மனிதப்பிறவி பெருமையுறுவது எப்படி? அப்பிறவிக்கு அதன் எலும்போடு சேர்ந்து பிறந்திருக்கின்ற 'அன்பு' என்ற உணர்ச்சி இருக்கின்ற காரணத்தினுல்தான். அன்பில்லையேல் வாழ்க்கையில் வனப்பில்லை; சீரில்லை, சிறப்பில்லை; புகழில்லை, புனிதமில்லை.

'ஊருக்கு உபதேசம்; உனக்கில்லையடி' என்பார் சிலர்! அதுபோல, தன் நெஞ்சத்தில் அன்பின்றி, இரக்க உணர்வின்றி, அலைந்து திரிவார்கள். ஆலயம் கட்டுவார்கள்; ஆண்டவனைத் தொழுவார்கள்! அருச்சனைகள் பலபுரிந்து தன் அக்கிரமத்தை மறைக்க முயலுவார்கள். அவர்களை இறைவன் தன்பக்தன் என்று தட்டிக் கொடுப்பதில்லை!

'தானிருக்கும் நிலத்தில் ஈரமில்லையென்று மரம், வேறு இடத்திற்குச் சென்று செழிக்கமுடியாது!' அதுபோல, மனிதன் தன் உள்ளத்தில் அன்பில்லா விட்டாலும், பிறருடைய அன்பால் செழிக்க நினைப்புத் தோன்றலாம்! ஆனுல் அது இயலாத காரியம்.

அன்போடு நடக்கின்ற மனிதர்கள்தான் உயிருள்ள எலும்புகளாவார்கள். அன்பற்ற, இரக்க உணர்வற்ற அன்பர்களுடைய உடம்பு, உலர்ந்துபோன எலும்புக்குவியலைத் தோலால் மூடியிருப்பது போல்தான்.

'அன்பு' அழகான மூன்றெழுத்துச்சொல். 'அன்பு' — என்று உச்சரிக்கும்போது நெஞ்சத்தில் இன்பம் இன்பம் என்று துள்ளி வழிகின்றது! காரைக்காலம்மையார் 'இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகிருர் இறைவன் முன்னுல்! 'ஊன்கலந்து, உயிர்கலந்து, உவட்டாமல் இனிக்கும் அன்புப்பெட்டகமாம் திருவாசகத்தின் பெருமைதனைக் கூறுகின்ருர் வடலூர் வள்ளல்.

அன்பு- அன்பிலே 'அ' என்பது உயிரெழுத்தாகவும், 'ன்' என்பது மெய்எழுத்தாகவும், 'பு' என்பது, உயிர்மெய் எழுத்தாகவும் நிற்பதுபோல, அ - மனிதனின் உயிராக, ன் — அம்மனிதனின் உடலாக, பு — உயிரும் உடலும் கூடிய மெய்

யாக எண்ணி இவ்வுடலில் உயிர் இருக்கும் வரையில் நாம் ஆற்றுகின்ற பணிகளனைத்திலும், அன்பை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது.

மேனியழகு கண்ணுக்கு விருந்தளிக்க சொல்லின் இனிமை செவிக்கு இன்பமளிக்க, இதழ் சுவைப்பது வாய்க்குச் சுவை யளிக்க, உடல் மணமும், மலர்மணமும் மூக்கிற்கு இன்ப மளிக்க, கட்டித்தழுவுதல் உடலுக்கு உணர்ச்சியளிக்க ஐந்து இந்திரியங்களும் ஒரே காலத்தில் அனுபவிக்கக்கூடிய இன்பம் பெறுவது அழகிய பெண்ணிடத்தில்தான் என்று நுகர்பவன் அன்பின் பெருமையையும், அருணகிரியாரின் அருள்வாக்கை யும் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அன்பின் அடிப்படையிலே உருவானது தான் உலகி லுள்ள உயிரினங்கள் அனைத்தும். அவ்வன்பை உள்ளத்தில் சுவைக்க வேண்டும். இரக்க உணர்ச்சியை இதயத்தில் பெற வேண்டும் மாற்றாரின் துயரினை மனத்தில் கொள்ள வேண்டும் உள்ளத்தின் உணர்ச்சிதான் அன்பின் அடிப்படை, அந்த உணர்வு, அந்தத் தெளிவு, மனிதனுகப் பிறந்த ஒவ்வொரு வரும் பெற்றிருக்க வேண்டுவது சாலச்சிறப்புடையதாகும்.

'இளியார் தம் நெஞ்சத்து நோய் உரைப்ப, அந்நோய் தணியாத உள்ளம் உடையவர்களாக இருப்பவர்கள் வாழ் வதைவிட வீழ்வதே உலகிற்கு நன்மை செய்தவர்களாவர்.

மலையுளே பிறக்கும் நறிய மணந்தரும் குறடு அதைப் பூசுவார்க்குப் பயன்தருமே யன்றி மலைக்கு யாதுபயன்? விலையுயர்ந்த வெண்முத்துக்கள் தம்மை அணிவார்க்கே அழகு கூட்டுவதல்லாமல் தாம் பிறந்த கடலுக்கா பயனளிக்கிறது? யாழினின்று தோன்றும் இன்னிசை அதைக் கேட்போர்க்கு இன்பமளிக்கிறதே யன்றி, அவ்யாழுக்கு அதனுல் யாதுபயன்?

அதுபோன்று, விருப்பு வெறுப்பற்ற இறைவனால் படைக்கப்பெற்ற இவ்வுடலுள், உள்ளத்துள், கருத்துள், என்

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

## கமலக் கந்தன்

முக்கண்ணன் பார்வையில் உதித்தவனே
மூவிரண்டு கமலத்தில் பிறந்தவனே
மூவிரண்டு காரிகையிடம் வளர்ந்தவனே
மூவிரண்டு குன்றுகளில் நின்றவனே
மூவிரண்டு முகத்தை யுடையவனே
பன்னிரண்டு செவிகள் கேட்பதற்கோ
பன்னிரண்டு கண்கள் பார்ப்பதற்கோ
பன்னிரண்டு கைகள் காப்பதற்கோ
பன்னிரண்டு கால்கள் நிற்பதற்கோ

திரு. சந்திரவாணன் அவர்கள்,
No. 30, கிழக்கு நஞ்சய முதலி தெரு,
கரூர், திருச்சி (ஜில்லா).



---

(முன்பக்கத் தொடர்ச்சி)

ணத்துள் வைக்கப்பட்ட அன்பு அதைப்பேணி ஒழுகுபவர்களுக்கே பெரும் பயனளிக்கிறது.

ஆகையால் இவ்வுலகில் சிறுமை அகல வேண்டும்! பெருமை பெருகவேண்டும்! அரக்க உணர்வு அற்று, இரக்க உணர்வு பெற்று, சைவத்திருத்தொண்டு செகமெங்கும் பரப்ப வேண்டும்! பண்பு வளரவேண்டும். அனைவருடைய இதயங்களிலும் அன்புள்ளம் மலர ஆலவாயன் அருள் புரிய வேண்டும்.

# "இறைவனிடம் முறையீடு"

திரு கனக. சுப்பிரமணியம் அவர்கள்,
சென்னை – 9.

---

1. கற்றிலேன் மறைக ளெல்லாம்
கற்றோர்பால் கனிந்து சென்று
பெற்றிலேன் கேள்வி ஞானம்
பெரியவர் தம்மை நாடா
சிற்றறி வுடைய சேயேன்
செய்வதை யறியே னெந்தன்
குற்றத்தைப் பெரிதெண் ணாது
குணமாகக் கொள்வீ ரய்யா!

2. நேசமாய் நித்தம் நித்தம்
நீராடி தூய்மை யோடு
பூசைநான் செய்த தில்லை
பூக்களை மாலை யாக்கி
ஆசையாய் உன்தோள் மீது
அணிந்திலேன் ஏழையேன் நான்
ஈசனே கைவி டாதீர்
என்பிழை பொறுப்பீ ரய்யா!

3. சிறந்தநின் புகழைப் பாடிச்
செம்மைசேர் வாழ்வை நாடி
பிறந்ததின் பயனை நண்ணிப்
பெருஞ்செய லாற்றி டாது
இறந்திடும் உயிரை என்றும்
இருந்திடும் என்றே எண்ணி
மறந்துநான வாழ்ந்து கெட்டேன்
மன்னிக்க வேண்டு மய்யா!

---

(தொடரும்)

# பிறவி வேண்டேன்

**திரு. ஜெ. மகாதேவன் அவர்கள்,**
*8, சிங்காரத்தோட்டம் 6வது சந்து,*
*பழைய வண்ணாரப்பேட்டை, சென்னை—21.*

---

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு. —*திருக்குறள்.*

உடம்பானது நோயினால் இளைப்பதைப் போன்று உயிரும் எண்ணரிய பிறவிகளை எடுப்பதால் இளைக்கின்றது.

''புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய் பேயாய்க் கணங்களாய்
வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்துஇளைத்தேன் எம்பெருமான்''

என்பார் மாணிக்கவாசக சுவாமிகள்.

பிறவிகளில் மானிடப் பிறவியே சாலச்சிறந்தது. ''அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது'' என்று ஔவையாரும், ''நந்தமக்கு ஈதோர் பிறவி வாய்த்தது மதித்திடுமின்'' என்று அப்பரும், ''எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான் யாதினும் அரிது அரிது காண்! இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ? ஏது வருமோ? அறிகிலேன்'' என்று தாயுமானரும் மானிடப் பிறவியின் அருமையை விதந்து ஓதுகின்றனர்.

ஏனெனில், இப்பிறவியில்தான் எல்லாம்வல்ல இறைவனை உணர்ந்து சிந்தித்து வந்தித்து அவன் அருள் பெற இயலும். மற்றப் பிறவிகளில் அங்ஙனம் முயலுதல் இயலாது. மக்கட் பிறப்பெடுத்தும் எம்பிரான் அடியை பேணாமல் இருப்பது எவ்வளவு பேதைமை! அன்னார், பிராணிகளினும் கீழோரே,

அவர்களைப் பார்த்து இரங்குகின்றார் மந்திரம் அளித்த திருமூலர்.

''பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே''. —திருமந்திரம்.

அருணகிரிநாதரும் முருகப் பெருமானிடம்,

''பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற் றிலேன்மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட்சங் க்ராம சயில சரசவல்லி
இறுகத் தழுவும் கடகாச லபன் னிருபுயனே''.
—கந்தர்அலங்காரம்.

என்று கூறி வருந்துகின்றார்.

பிறவித் துன்பத்தை உணர்ந்தோர் பிறவியே வேண்டாம் என்றே கூறுவர். அதனை வேரோடு தொலைக்கவும் வழி தேடுவர். பிறவா யாக்கை பெரியோனாகிய ஆண்டவன் ஒருவனால்தான் பிறவியை வேரறுக்க முடியும். அவன் திருவருள் கிட்டினால் பிறவி தானே ஒழிந்து விடும். அதனால்தான் பரமன் அடியார்கள் 'தொல்லைஇரும் பிறவி சூழும் தளைநீக்கி அல்லல் அறுத்து ஆனந்த மயமாக்கும்' பரம்பொருளை என்றும் மறவாமல் போற்றிக் கொண்டிருப்பர். ''பாழ்த்த பிறப்பு அறுத்திடுவான் யானும் உன்னை பரவுவனே'' என்பார் வாதவூரர்.

அரிய மானிடப் பிறவியில் உள்ள துன்பங்களைக் கூற வருகின்றார் தொண்டரடிப்பொடி ஆழ்வார். ''மனிதனுடைய ஆயுள் நூறு ஆண்டுகள் என வேதநூல் மொழிகின்றது. அதில் ஐம்பது ஆண்டுகள் உறக்கத்தில் கழிகின்றன. மீதியில் பதினைந்து ஆண்டுகள் பாலபருவமாகிய பேதைப்பருவத்தில் போகின்றன. பாக்கியுள்ள முப்பத்தைந்து ஆண்டுகளே வாழ்க்கைக்கு. அவற்றின் இடையில் வரும் பிணி, பசி, மூப்பு துன்பங்களுக்கு குறைவே இல்லை. ஐயோ, நினைக்கும்போதே உள்ளம் நடுங்குகின்றதே. ஆதலால், எனக்குப்பிறவி வேண்டாம்'' என்கின்றார் ஆழ்வார், தென்அரங்கனிடம்,

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# காலக் கணிதம்

திரு. A. இராசமாணிக்கம் அவர்கள்,
உதவி ஆசிரியர்,
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்தொடக்கப்பள்ளி,
திருப்பனந்தாள்.

---

*(மலர் 19 இதழ் 4 பக்கம் 204ன் தொடர்ச்சி)*

**இதழ் 3.**

**சங்கிராந்தி புருஷலெட்சணம்:**

இரண்டாம் இதழில் சங்கிராந்தி புருஷலெட்சணம் தை மாத சங்கிராந்தியின் வாரத்தாலும், கரணத்தாலும், இராசியாலும் ஏற்படுகிறது எனக்கூறப்பட்டது. அதில் வாரத்தால் வருவனவற்றையும், பவகரணத்தில் வருவதையும் கூறப்டுள்ளது. இனி மற்றையகரணங்களில் வருவனவற்றைக் கவனிப்போம்.

2. இரண்டாவது பாலவகரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதையானது சிவப்பு வஸ்திரம்

---

( முன்பக்கத் தொடர்ச்சி )

வேதநூல் பிராயம் நூறு மனிதர்தாம் புகுவரேனும்
பாதியே உறங்கிப் போகும் நின்றதில் பதினையாண்டு
பேதை பாலகனது ஆகும் பிணி பசி மூப்பும் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே.

ஆகையால் நாமும் நம் பிறவி போய் அகல, எல்லாம் வல்ல இறைவனிடம் இறைஞ்சி உய்ய முயலுவோமாக.

ஈனமிகுத் துளபிறவி — அணுகாதே
யானும் உனக்கு அடிமையென வகையாக
ஞானம் அருள்தனை அருளி வினைதீர
நாணம்அகற் றியகருணை புரிவாயே. —திருப்புகழ்.

வாழ்க உலகெலாம்.

---

உடுத்தி, வைடூரிய ஆபரணம் அணிந்து, கட்கம் ஆயுதம் கையில் கொண்டு, குங்குமம்பூசி, சிறுசெண்பகப்பூ மாலை சூடி., தாமிரபாத்திரத்தில் பாயஸம் உண்டு, புலி வாகனம் ஏறி, கோபமுகத்துடன் தெற்கில் பிரயாணம் செய்யும்.

3. கௌலவ கரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதை கண்டாங்கி வஸ்திரம் உடுத்தி ஸ்வரண ஆபரணம் அணிந்து, கலப்பை ஆயுதம் பிடித்து. வெண்டா மரைப்பூ உபவாயுதமாய்க் கொண்டு, சந்தனம்பூசி, மகிழம்பூ புஷ்பம் சூடி, சூர்ப்பப் பாத்திரத்தில் மாவு உணவு உண்டு, பன்றி வாகனம் ஏறி, இலச்சையான முகத்துடன் வடக்கே பிரயாணம் செய்யும்.

4. தைதுலை கரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதை மஞ்சள் புடவை உடுத்தி நீலமணி ஆபரணம் அணிந்து, ஸஸ்திர ஆயதம் கையில் கொண்டு, கோரோசனம்பூசி மல்லிகைப்பூ சூடி, இருப்புப் பாத்திரத்தில் அப்பம் உண்டு வைராக்கிய முகத்துடன் கழுதை வாகனம் ஏறி மேற்கே பிரயாணம் செய்யும்.

5. கரசை கரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதை கருப்புப்புடவை உடுத்தி, கோமேதகம் ஆபரணம் அணிந்து, அஸ்திர ஆயுதம் பிடித்து, மஞ்சள்பூசி, மந்தாரை மலர் சூடி, ஈயப் பாத்திரத்தில் பால் உண்டு மறதி யுடைய சிந்தையாய் யானை வாகனம்ஏறி தெற்கே பிரயாணம் செய்யும்.

6. வனச கரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதை கம்பளிஆடை உடுத்தி, முத்துஆபரணம் அணிந்து, சக்கிராயுதம் பிடித்து, குங்குமம் கந்தம் பூசி, நீலோத்பலம் புஷ்பம் சூடி, பஞ்சலோக பாத்திரத்தில் தயிர் உண்டு, விளையாட்டு முகத்துடன் எருமைவாகனம் ஏறி வடக்கு நோக்கிப் பிரயாணம் செய்யும்.

7. பத்திரை கரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதை தோல் ஆடை உடுத்தி, வெள்ளி ஆப ரணம் அணிந்து, சர்ப்பம் ஆயுதமாய் தாம்பூலவாசனை பிரியத்

துடன், அசோகபுஷ்பம்சூடி, மண்பாத்திரத்தில் சித்ரான்னம் உண்டு ஹாஸ்ய முகத்துடன் நாய்வாகனம் ஏறி தென்திசையாய்ப் பிரயாணம் செய்யும்.

8. சகுனி கரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதை கந்தைத்துணி உடுத்தி, பிரவாளம் ஆபரணம் அணிந்து, சூல ஆயுதம் பிடித்து சிந்தூரம் பூசி, சண்பகப்பூச்சூடி, இரசித பாத்திரத்தில் பழம் வெல்லம் புசித்து அதோ முகத்துடன் ஆடு வாகனம் ஏறி சனிமூலையாய்ப் பிரயாணம் செய்யும்.

9. சதுஷ்பாத கரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதை தழையை ஆடையாக உடுத்தி ஸ்படிக மணி பூஷணம் பூண்டு, வச்சிராயுதம் பிடித்து, வீபூதிபூசி, கொன்றைமலர்சூடி மரப் பாத்திரத்தில் மது உண்டு, ஊர்த்துவ முகத்துடன் எருது வாகனம் ஏறி கிழக்கில் பிரயாணம் செய்யும்.

10. நாகவ கரணத்தில் தை மாதம் பிறந்தால் அந்த சங்கிராந்தி தேவதை மரப்பட்டையை உடுத்தி, வைடூரியம் பூஷணம் பூண்டு உலக்கையை ஆயுதமாக எடுத்து வீபூதிபூசி, தாழம்பூச்சூடி, தங்கப்பாத்திரத்தில் நெய் உணவு உண்டு சம நோக்கு முகத்துடன் அசுவவாகனம் ஏறி கிழக்கில் பிரயாணம் செய்யும்.

11. கிமுஸ்துக்கான கரணத்தில் தைமாதம் பிறந்தால் அந்தசங்கிராந்தி தேவதை வெண்பட்டு உடுத்தி, புஸ்பராகம் பூஷணம் அணிந்து, வில் ஆயுதம் எடுத்து, சவ்வாது வாசனை பூசி தாமரை மலர்சூடி குங்கிலிய தூபமுடன் மூங்கில் பாத்திரத்தில் சர்க்கரை சுவைத்து வக்கிர முகத்துடன் கோழி வாகனம் ஏறி வடக்கில் பிரயாணம் செய்யும்.

**இராசியால்வருவன:—**

மேஷம், ரிஷபம், மிதுனம் ஆகிய இராசிகளுக்குரிய நக்ஷத்திரமாக வந்தால் கிழக்குமுகமும், கடகம், ஸிம்மம், கன்னி ஆகிய இராசிகளுக்குரிய நக்ஷத்திரமாக வந்தால் தெற்கு முகமும் துலாம், விருக்சிகம், தனுசுக்குரிய நக்ஷத்திரமாக வந்தால் மேற்கு முகமும், மகரம், கும்பம், மீனம் ஆகிய

இராசிகளுக்குரிய நக்ஷத்திரமாக வந்தால் வடக்குமுகமும் பார்த்து மேலே விவரித்த கரணங்களில் கூறிய திக்காகப் பிரயாணம் செய்யும்.

**மனுமுதலிய கற்பகாலங்கள்:—**

மானிட வருஷங்கள் 360 கொண்டது ஒரு தேவ வருஷம். தேவ வருஷம் 4800 ஒரு கிரேதாயுகம். தேவ வருஷம் 3600 ஒரு திரேதாயுகம். தேவ வருஷம் 2400 ஒரு துவாபரயுகம் தேவ வருஷம் 1200 ஒருகலியுகம். தேவ வருஷம் 12000 கொண்டது ஒரு மகாயுகம் ஆகும். மகாயுகம் 71 கொண்டது ஒருமனுவின்காலம். 14 மனுக்கள் நடக்கிரகாலம் ஒரு கற்பகாலம் அல்லது பிர்மாவுக்கு ஒரு தினம். இவ்வித கற்பகாலம் 36000 சென்ருல் பிர்மாவின் பரமாயுளாகும். இவ்விதம் 1000 பிர்மாவின் பரமாயுளான காலம் விஷ்ணுவிற்கு ஒரு நாழிகையாகிறது. இவ்விதம் 1000 விஷ்ணுவின்காலம் ஒரு சிவநிமிஷம் ஆகும் என்பது தவரிஷிகளால் கணக்கிடப்பட்ட விஷயங்களாகும்.

**யுகாதி புண்ணிய தினங்கள்:—**

புண்ணிய தினங்களைக் குறிப்பிடும் போது சாந்திரமான மாதங்களில் குறிப்பிடப்படும். சுக்கில பக்ஷத்தைச் சுத்தம் என்றும், கிருஷ்ண பக்ஷத்தைப் பகுளம் என்றும் குறிப்பிடப்படும். அதாவது சுத்த பக்கம் என்பது சுக்கில பட்சத்தையும் பகுளபக்கம் என்பது கிருஷ்ண பட்சத்தையும் குறிக்கும்.

வைசாக சுத்த திருதியை அதாவது சௌரமானப்படி மேஷ மாதத்தின் சுக்கிலபட்ச திருதியை திரேதாயுகாதி புண்ணிய தினமாகும். பாத்திரபத பகுள திரயோதசி அதாவது ஆவணி மாதத்திய கிருஷ்ணபட்சத்தில் வருகிற திரயோதசி கலியுகாதி புண்ணிய தினமாகும். இவ்விதம் கார்த்திக சுத்த நவமி கிருதயுகாதி புண்ணிய தினமாகும். மாக சுத்த பௌர்ணமி துவாபரயுகாதி புண்ணிய தினமாகும். மற்றும் மனுவாதி புண்ணிய தினங்களும், கல்பாதி புண்ணிய தினங்களும் பின் எழுதுவோமாக.

———

(தொடரும்)

# மணிவாசகரின் மாண்புறு உவமைகள்

வித்துவான். திரு. பி. ரா. நடராசன் அவர்கள்.

(முன் இதழ் 7-ன் தொடர்ச்சி)

'பல்லாவுள் உய்த்து விடினும் குடிக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத் — தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு (101)

பலகூட்டம் நிறைந்த ஆக்களிடையே இளங்கன்றைச் செலுத்தினால் அக்கன்று தன் தாயைத்தேடி, நாடி அடைவதுபோல பிறவிதோறும் பின்தொடரும் பழவினையும் அவ்வப் பிறப்பிற் குரியானைத் தேடித் தவறாது அடையும் என்பதாம். இதே கருத்தினை முனைப்பாடியார் தம் அறநெறிச்சாரத்தில் 'கன்றுடைத் தாய்போல் வரும்' (149) எனக் கூறுவர். நிழல் தான் கொண்ட உருவத்தினை முன்பின் விட்டு அகலாது பற்றப் படுதல் போலத் திருவடிகளைப் பற்றும் நிலையினைக் கூறினார். நிழல் தன்னுருவினைப் பின்பற்றல் இயல்பாம். அதேபோல் இறைவன் உருவமாகவும் அவனின் நிழலாக நாம் இருத்தலையும் நிழலாகிய நாம் உருவான அவனைப் பின்பற்ற வேண்டுமெனவுங் கூறினார் எனவுங் கொள்ளலாம். உருவினை நிழல் பின் பற்றும் நிலையினைச் செங்நாப்போதர் 'தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை, வீயா(து) அடி உறைந்தற்று' (208) என்பர். அன்பின் நிறைவினைக் கூறுவாராய் 'அன்பெனும் ஆறு கரையது புரள' என்றார். ஆற்றிலே வெள்ளம் கரைபுரண்டுவரின் நாட்டிற்கு சேதமாம். ஆனால் அன்பு ஊற்றெடுத்துக் கரைபுரண்டோடின் நாட்டிற்கு நல்லதாம்.

5. திருச்சதகம்

**உவமை 16**

கரிய பானலார் கண்ணியார் (19)

உ. பொ. நி.

. . . . . . . . . . . . . . . . . . . கரிய
பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே'

பொழிப்புரை.

கரிய குவளை மலர்போன்ற கண்களால் கொலைசெய்யும்

மகளிரின் கொடுமைக்கு ஆற்ருது துடித்து உருகும் பயனற்ற நெஞ்சே!

**விளக்கம்.**

குவளை மலர் போன்ற கண்கள் என்று அடிகளார் முன்னும் கூறினர். பெண்களின் கண்கள் ஆடவருக்கு நோயைத் தரும் என்பதை 'இருநோக்கு இவள் உண்கண் உள்ளது' (1091) என்ற குறளாலும் உணரலாம். 'அடி மடவார் கடைக்கண்ணல் இடர்ப்பட்டு, நெஞ்சாய துயர்கூர நிற்பேன்' (அச்சோப்பதிகம் 5) எனப் பின்னும் பெருமானுர் கூறுவர். கண்ணினை நாம் பெற்றிருப்பது பெருமானைக் காணவும், அவன் பெருமை பேசும் நூற்களைக் கற்கவுந்தான். அதனை விடுத்து அழியும் சிற்றின்பத்தினைத் தரவல்ல மகளிரின் கடைக்கண்ணல் இடர்ப்படுகின்றேனே என்பாராய் 'என் நாயினேன் தன் கண் இணை நின் திருப்பாதப் போதுக்கு' ஆக்காமல் வாளாவிருந்தேனே எனக் கவல்கின்ருர். பின்னும் பெருமானுர் 'எம் கண் மற்ருென்றும் காணற்க' (திருஎம் பாவை 19) என்று கூறுந்திறங்கண்டு மகிழ்க.

**உவமை 17**

'பள்ளந்தாழ் உறுபுனலில்' (21)

**உ. போ. நி.**

'பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ் மேலாகப்
பதைத்துருகும் அவர்நிற்க என்னை ஆண்டாய்க்கு'

**பொழிப்புரை**

உயர்ந்து நிற்கும் மேலிடத்திலிருந்து தாழ்வுற்றிருக்கும் கீழான பள்ளப்பகுதிக்கு விரைந்துபாயும் தண்ணீர்போல மேல்கீழாக வணங்கி விழவும் அவர்தம் நெஞ்சு துடிதுடித்துக் குழைந்து உருக்கொள்ளும் அவர்மாட்டு நீ செல்லாது தகுதி யற்ற என்னிடம் வந்து ஆண்டு கொண்ட உன்னை.

**விளக்கம்**

பெருமானுர் எத்துணைத் தன்னடக்கமாகவும், பணிவாகவும் தம்மைக் கூறுகின்ருர். 'பெருக்கத்து வேண்டும் பணிவிற்' கொப்பவும் 'நல்லவர் நானும் நிலைபோல' (குறிஞ்

சிக்கலி 42) என்ற சான்றேர் நெறிக்கிணங்கத் திருவாதவூரர் தம்நிலையினைக் கூறினர் எனக்கொள்க. மணிமொழிப் பெருமான் அன்பிலும் அருளிலும் குறைந்தவரல்லர். பின் எதற்கு இப்படிக்கூறினர் என்பதைநோக்கின், தன்னை ஊமையாகவோ, குருடனுகவோ, செவிடனுகவோ, முடவனுகவோ, நொண்டியாகவோ, அலியாகவோ, பிறப்பிக்காமல் நல்ல உருவ அமைப்பில் படைத்துத்தந்த ஆண்டவனுக்கு நன்றி கூறும் கடப்பாட்டு முறையில் அவனை ஒருமுறையேனும் நினைக்க வேண்டும், அப்படி நினைத்தால் அவன் நினைப்பார் நெஞ்சில் உடன் உட்சென்று அவர்மாட்டிருந்து அவருக்கு நல்லருளை வழங்கி வருவான் என்பதற்காகவே கூறினர் எனக் கொள்ளவேண்டும். நம்போன்றேரும் உய்யவேண்டுமென எண்ணும் பெருமானின் அன்பிற்கு எல்லையுண்டோ! உலகம் அன்பால் வாழ விழையும் அவர்தம் அருள்நெறி வாழ்க! வளர்க! என்று நம்மையும் அறியாமல் கூறுகின்றேம்.

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

*(மலர் 19. இதழ் 7-ன் தொடர்ச்சி)*

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MANIKYA VACHAKA)

Our next five stanzas, taken from a hymn of fifty, are full of the pathos expressed in the title, which is a refrain recurring in every verse. Only flashes of the light of the presence of God pierce the prevailing gloom. The saint cannot free himself from sensuality, even while he hates it. He wonders whether even the God who drank poison for others' sake will leave him alone.

94 கடையவனேனைக்கருணையினாற்கலந்தாண்டு
கொண்ட
விடையவனேவிட்டிடுதிகண்டாய்விறல்வேங்கை
யின்றோ
லுடையவனேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
சடையவனேதளர்ந்தேனெம்பிரானென்னைத்தாங்
கிக்கொள்ளே.

### Wilt Thou Leave me?

94 Mingling in grace with me, O rider of the bull,
Thou mad'st me Thine.
But wilt Thou leave me? Thou whose form in
the fierce tiger's skin is clad,
Uttarakosamangai old has Thee for king. O lord
of mine
With matted hair, hold Thou me up; for I am
weary grown and sad.

(To be continued.)

---

உ
திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## திருவேசறவு

இனி, திருவேசறவுப் பத்தாவன.

அகத்தியச் சூத்திரம்.

பாசமதறு திருவேசறவு பத்தெட்
டனைநீங்காச் சுட்டறிவொழிதல்.

பொழிப்புரை:— முற்பதிகத் திருவுளச் சிவாநுபூதி அருளி, சுவாநுபூதிகமாக மலமே உண்மையாய் மருவுமென்னைப் பலவிதம் அருளாற் பாதுகாத்து, தானே நானென்னுந் தன்மை தருதற் கடாதிருந்தும், எனை ஆட்கொண்டு அன்பே இன்பாக்குதலின் எளிதோவென்று, தன்னிழப்பதனை அருளால் சாதித்த துரைத்தலெனக் காண்க.

திருப்பதிகம் கலிவிருத்தமாகத் திருப்பெருந்துறையில் ஓதியது.

544. இனி, நரியைக் குதிரையாகத் திருவுளம் செய்த (தி. - ன,) :—

இரும்புதரு மனத்தேனை ஈர்த்தீர்த்தென் னென்புருக்கிக்
கரும்புதரு சுவையெனக்குக் காட்டினையுன் கழலிணைகள்
ஒருங்குதிரை யுலவுசடை உடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பொன்னருளே.

(இ - ள்). ஆண்டவனே! ஓர் விண்ணப்பம்; தேவரீர் பெருங்கருணையான இரக்கத்தால் அடியேன் மனம் இரும்பு போல்வதை, என் மனம்போன வழிவிட்டுத் திரும்பத் திரும்ப இழுத்து, அன்புருவாக்கி, கன்னலின் சுவைபோலத் திருவடியை என்னுயிரில் காட்டறிவாக நின்று காட்டிய, கங்கைத் திரையனைய உலவும் திருச்சடையானே! அடியேன் பக்குவம் பெறுவதாக, நரியான விஷயங்கள் பெரும்போதப் புரவியாக அருளிய திருவருட்கு என் செய்வேன்! என வருளியதைக் காண்க.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை—திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரு. 13/- ஷை நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

# ST. RAMALINGAR AS A RELIGIOUS REFORMER.*

**Thiru. P. Mutharasu Avl.,** M. A., B. T.,
Professor of Tamil,
Sri K. G. S. Arts College, Srivaikuntam.

( மலர் 19. இதழ் 7-ன் தொடர்ச்சி )

*His love of Tamil Language:*

Above all, his love for Tamil, our mother-tongue has no equal in the realms of all our literature. It is evident from the mellifluous songs, about seven thousand in number and from his prose utterances about the ever-lasting qualities of Tamil. He has established the greatness of Tamil in a century when all the Tamils around him gave scant respect to it. He has also proved beyond doubt that it is the only language which is capable of melting even the stony hearts and of expressing delicate spiritual experiences. He feels great satisfaction and expresses profound gratitude to God for having ordained him to be born in the land of Tamils and to sing His Praise with intense devotion and exhilerating emotion.[48]

Yet it is highly disappointing to say that our fore-fathers in the 19th century have not gained much from his teachings. It is rather shameful to find that though St. Ramalingar tried hard by means of his devotional songs, lucid discourses and practical living to reform the people, the superstitious and caste-ridden men failed to appreciate his lofty ideals of Universal Love and Universal Brotherhood. But in the course of his speeches, he would often chide them as unfit to become members of this Society of Universal Brotherhood. He told them that the time was not far off when persons from Russia, America (these two countries were always named) and other foreign lands would come to India and preach to them the same doctrine of Universal Brotherhood and

then only they would know and appreciate the grand truths that he was vainly trying to make them accept. This was clearly a prophecy about the advent of Madame Blavatsky and Colonel Olcott from Russia and America to India in connection with the founding of the Theosophical Society, which took place several years after the Saint had foretold its happening.[49] So, on 30th January 1874, when he was delivering his parting message to his disciples, he said, "O! My brothers! I was keeping my shop open so far under the behest of god; none of you seemed to benefit by it; I have now decided to close this." He directed them to take to the path of Jivakarunyam, worship God in the form of eternal Light and attain salvation. He consoled them that he would not be visible for sometime; but he assured them that he would re-appear at the proper time.

## CONCLUSION:

In conclusion, it is worthwhile to quote from William James about the characteristics of Saintliness, which fully conform to those of our Saint. "There is veritably a single fundamental and identical spirit of piety and charity common to those who have received grace; an inner state which before all things is one of love and humility of infinite confidence in God and of severity for one's own self, accompanied with tenderness for others."[50] May God bless us with the strength of mind to spread St. Ramalingar's gospels all over the world.

---

* A paper submitted to II World Tamil Conference.

## மேற்கோள் விவரக் குறிப்பு

48. திருவருட்பா — வசனப்பகுதி: சத்தியப் பெருவிண்ணப்பம் — பக்கம் 208
49. Extract from the "theosophist" (July 1882) quoted in Appendix I by C. V. G, Chetty in his work "Sri. Chidambaram Ramalinga Swamiji – His Life, Mission & Studies."
50. William James; The Varieties of Religious Experience saintliness – P. 255.

## திருப்பரங்குன்றத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள்
## நினைவு நாள் அன்னம்பாலிப்பு நிதி ரூ. 3000



அருந்தமிழ்ப் பாண்டி நாட்டில்வன் புகழ்க்கை
லாசமா புரத்தில்வே ளாள
ரரியசண் முகசி காமணி கவிரா
யருஞ்சிவ காமியம் மையுஞ்செய்
பெருந்தவ மதனுற் செந்தில்வேற் குகன்றன்
பேரரு ளாலுதித் தொருவர்
பேசுத லிலாதைந் தாண்டுகா றமரப்
பெற்றவர் பெரினுள மயர்ந்தே
திருந்துமக் குகன்சந் நிதியினிலொருமண்
டலத்தினிச் சேயுறு மூகைத்
திறமகன் றிலதேல் மடிவமென் றுறையச்
சிறுவர்சொப் பனத்திலிற் கடைநாட்
பொருந்திவேள் குமரகுருபர னெனப்பேர்
புனைந்துநா வதவிலா றெழுத்தும்
பொறித்தறுமுடன்வாக் குடையராய்க் கந்தர்
கலிவெண்பாப் புகன்றுபோற் றிவரே 1
போற்றியோர் குருவை அருள்கென வேண்டப்
புகலுரை தடைப்படும் யாங்கப்
புங்கவன் றனையே கொள்கென வசரீ
ரியிற்பகர் தலும்புற விடைகொண்
டாற்றல்சான் மதுரைக் கயற்கணு கிபின்
னைத்தமி ழியற்றுபு கைக்கொண்
டடைதலும் பரங்குன் றதுதிரு மலைநா
யகர்க்கம்மை கனவினி லருளத்
தோன்றிய வாறே யெதிர்கொடு பணிந்தன்
னவர்திரு முறையோடு மலரைத்
திறல்கயத் தேற்றிச் சந்நிதி சேர்க்கத்
திகழ்ந்தரங் கேற்றுழி வருகை
சாற்றுறு பருவத் துமையிளங் கோலந்
தயங்குநா யகர்மடி யமர்ந்து
தானுவந் தருளி மணிவடந் தரிக்குந்
தகைபெறீஇ முற்றுவித் தனரே 2

என்று ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் சரித்திரசார பஞ்சகத்தில் கூறியுள்ளவண்ணம் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் மதுரைக்கு எழுந்தருளத் திருவுளங்கொண்டு புறப்பட்டு வருங்கால், வழி

யிலே மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் என்னும் பிரபந்தத்தைப் பாடி முடித்துக்கொண்டு திருப்பரங்குன்றத்தை அடைந்து சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்த பொழுது, மீனாட்சி அம்மையார் திருமலைநாயக்கர் கனவில் தோன்றிக் 'குமரகுருபரர் நம்மைக் குறித்து ஒரு பிள்ளைத்தமிழ் பாடிமுடித்துக் கொண்டு திருப்பரங்குன்றத்தில் தங்கியுள்ளார், அவரைப் பரிவாரங்களோடு சென்று அழைத்து வருக' என்று கூற அங்ஙனமே திருமலைநாயக்க மன்னர் பரிவாரங்களுடன் திருப்பரங்குன்றத்துக்குச்சென்று ஸ்ரீ குமரகுருபரரையும், பிள்ளைத் தமிழையும் யானைமீதேற்றிக்கொண்டு மதுரையில் எழுந்தருளச் செய்த திறத்தை நினைவு கூர்ந்து, ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு நாளாகிய வைகாசி அமரபக்ஷம் திருதியை நாளில், திருப்பரங்குன்றத்தில் அன்னம்பாலித்தற்பொருட்டு, இத் தருமம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப் பெற்றது. இது 'திருப்பரங்குன்றத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு நிதி' எனப்பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 3000/- /ரூபா மூவாயிரம்/ இது ஆண்டொன்றுக்கு 7% வட்டித் தரக்கூடிய நிலையான முதலீடாகக் கும்பகோணம் ஸ்டேட் பாங்கில் முதலீடு செய்யப்பெற்றிருக்கிறது. பிக்சட் டிபாஸிட் நெ. 076297- 15-12-1967 - 60 மாதங்கள் ரூ. 3000/- ரூபா மூவாயிரம். இது நம்மாலும் நமக்குப்பின்உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப்பெற்றுவரும்.

3. ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாளில் பிற்கண்ட 51 தலங்களில் நம்மால் முதற்பொருள் நிறுவப்பெற்று ஆண்டு தோறும் அன்னம்பாலிப்பு நிகழ்த்தப்பெற்று வருகிறது.

| | | |
|---|---|---|
| இராமேசுவரம் | கன்னியாகுமரி | திருச்செந்தூர் |
| ஸ்ரீவைகுண்டம் | திருநெல்வேலி | பழையபாவநாசம் |
| திருக்குற்றாலம் | உத்தரகோசமங்கை | திருப்பெருந்துறை |
| திருப்பத்தூர் | மதுரை | பழனி |
| பேரூர் | திருநணா — பவானி | திருப்பாண்டிக்கொடுமுடி |
| விராலிமலை | திருவானைக்கா | திருவையாறு |
| சுவாமிமலை | திருவிடைமருதூர் | திருப்பனந்தாள் |
| வேதாரண்யம் | திருப்புகலூர் | திருவாரூர் |

| | | |
|---|---|---|
| திருநாகைக்காரோணம் | திருநள்ளாறு | காவிரிப்பூம்பட்டினம் |
| ஆக்கூர் | மாயூரம் | வைத்தீசுவரன்கோவில் |
| சீர்காழி | ஆச்சாள்புரம் | சிதம்பரம் |
| திருப்பாதிரிப்புலியூர் | விருத்தாசலம் | திருக்கோவலூர் |
| திருவண்ணமலை | திருமாகறல் | காஞ்சிபுரம் |
| திருக்கழுக்குன்றம் | சென்னை | திருவொற்றியூர் |
| வடதிருவாலங்காடு | திருத்தணிகை | காளஹஸ்தி |
| பிரயாகை | வாரணசி | டில்லி |
| ஹரத்துவார் | ரிஷிகேசம் | திருக்கேதாரம் |

அங்ஙனமே இம்முதற்பொருளினின்று கிடைக்கும் வட்டித் தொகையில் இத்தருமத்தைப் பரிபாலனம் செய்வதற்குரிய நிர்வாகச் செலவுத்தொகை போக எஞ்சிய வட்டி முழுவதும், ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் பாடித் திருப்பரங்குன்றத்தில்தங்கி, விருதுகளுடன் பல்லக்கில் மதுரைக்குத் திருமலை நாயக்க மன்னனல் அழைத்துச்செல் லப்பெற்ற செயலை நினைவுகூர்ந்து ஸ்ரீ குமரகுருபரசுவாமி களின் நினைவு நாளாகிய வைகாசி அமர பக்ஷம் திருதியை நாளில் ஆண்டுதோறும் திருப்பரங்குன்றத்தில், அந்தணர், அருந்தவர் ஏழைகளுக்கு அன்னம்பாலித்தற்பொருட்டுச் செலவிடப்பெற்றுவரும்.

4. வட்டி வருமானத்துக்கேற்பவும், காலநிலைக்கு ஏற் பவும் நம்மால் தயாரிக்கப் பெறும் திட்ட ஜாப்தாவின்படி இவ்வன்னம்பாலிப்பு நடத்தப்பெற்று வரும்.

5. இவ்வட்டி வருமானம் வேறு எம்முறையிலும் செல விடப்பெறமாட்டாது. இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இம்முதற்பொருள் திரும்பியளிக்கப்பெறின் அதிகவட்டி தரக் கூடிய அரசியல்கடன்தாள்களிலோ அல்லது நிலையான முத லீடுகளிலோ முதலீடு செய்யப்பெறும்.

வளர்பூங் கோங்கம் மாதவியோடு மல்லிகைக்
குளிர்பூஞ் சாரல் வண்டறைசோலைப் பரங்குன்றம்
தளிர்போல் மேனித் தையல்நல்லாளோ டொருபாகம்
நளிர்பூங் கொன்றை சூடினன் மேய நகர்தானே — சம்பந்தர்.

Tirupanandal
Dated 23-12-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered at Tiruvademarudhur Sub-Registrar's Office as 51 of 196 of Book 4 volume 54, pages 155 to 159 - dated 26-12-1967.

உ

திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# ‘திருமுறை வெளியீடுகள்’

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 3 | 50 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த காசிக்கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் | 0 | 40 |
| 3 | .. சிதம்பர மும்மணிக்கோவை ,, | 0 | 20 |
| 4 | .. மதுரைக்கலம்பகம் .. | 0 | 40 |
| 5 | .. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் .. | 0 | 60 |
| 6 | திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக்கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் | 2 | 75 |
| 7 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | 1 | 25 |
| 8 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச்செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | 1 | 00 |
| 9 | பண்டார மும்மணிக்கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை | 1 | 00 |
| 10 | சிதம்பரச் செய்யுட்கோவை | 0 | 75 |
| 11 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும், ஹிந்தியும் | 0 | 50 |
| 12 | .. - மூலம் | 0 | 10 |
| 13 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்-மூலம் | 0 | 15 |
| 14 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் | 0 | 10 |
| 15 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | 3 | 00 |
| 16* | மூவர் தேவாரம் அடங்கன்முறை - தலமுறை | 8 | 75 |
| 17* | திருநாவுக்கரசர் தேவாரம் .. | 2 | 00 |
| 18* | சுந்தரர் தேவாரம் .. | 1 | 30 |
| 19 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் மூலம் மட்டும் | 0 | 56 |
| 20* | .. .. தெளிவுரை | 1 | 50 |
| 21* | பதினோராம் திருமுறை | 1 | 50 |
| 22* | பெரியபுராணம் (மூலம் மட்டும்) | 3 | 00 |
| 23* | அகத்தியர் தேவாரத்திரட்டு | 0 | 36 |
| 24 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி | 0 | 25 |
| 25 | திருக்கைலாய ஞானவுலா-உரையுடன் | 0 | 50 |
| 26 | திருக்கயிலைத் திருமுறை | 0 | 37 |
| 27 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | 0 | 19 |
| 28 | பழமொழித்திருமுறை | 0 | 25 |
| 29 | அப்பர்விழா வெளியீடு | 0 | 25 |
| 30 | Hymns and Proverbs | 0 | 30 |
| 31 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | 0 | 10 |
| 32 | திருவாரூர் நான்மணிமாலை | 0 | 50 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.
Regd. No M. 5574 

| | | |
|---|---|---|
| 33 | திருத்தொண்டர் புராணசாரம் ... | 0 40 |
| 34 | திருவிளையாடற்புராணம் உரை நடை ... | 2 25 |
| 35 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) ... | 1 75 |
| 36 | கந்தபுராணம்-முதல் மூன்று காண்டங்கள் (மூலம்மட்டும்) | 2 75 |
| 37 | .. யுத்த தேவ காண்டம் ... | 2 00 |
| 38 | .. தக்ஷகாண்டம் ... | 1 50 |
| 39 | கந்தபுராண உரைநடை ... | 3 00 |
| 40 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் ... | 0 25 |
| 41 | கந்தரனுபூதி தெளிவுரை ... | 0 35 |
| 42 | இந்து நீதி நூல்கள் ... | 0 10 |
| 43 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 44 | ஸ்ரீ சயிலம் ... | 0 10 |
| 45 | திருவுசாத்தானக் கல்வெழுத்துக்கள் ... | 0 37 |
| 46 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 47 | திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 50 |
| 48 | திருக்குறள்-பொருட்பால் .. ... | 2 50 |
| 49 | திருக்குறள் - காமத்துப்பால் .. ... | 1 00 |
| | ஷை 47, 48, 49 திருக்குறள் 3புத்தகமும் ... | 4 00 |
| 50 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1 00 |
| 51 | திருக்குறள்-உரைக்கொத்து-பொருட்பால் 2-ம் பதிப்பு | 2 75 |
| 52 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் ... | 1 25 |
| 53 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத்திரட்டும் ... | 0 30 |
| 54 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 13 |
| 55 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:,

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.
"தியாகராஜவிலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு.
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு: * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் எண் 51, 52 தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமர குருபரன்' பத்திரிகையைச்சாரும்'

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-68.